மேற்படி விளம்பரத்தில் அடங்கிய சங்கதிகள் ஒவ்வொன்றும் பொய்யினாற்புனைந்ததென்று தெரிந்துகொள்ளு முன்னரே, இவ்விளம்பரத்தையெழுதிய குருக்கள் ஆதியில் இன்னவரென்றும் அவருக்குந் தருமச்சாலைக்கும் உண்டான சம்மந்தம் இத்தன்மையதென்றும், மேற்படி பார்வதிபுரத்தில் வள்ளலாரால் நிர்ணயிக்கப்பட்ட சமரசசுத்தசன்மார்க்க சத்திய தருமச்சாலையிலும் சத்தியஞானசபையிலும் நடத்தவேண்டிய விதிகள் வள்ளலாரால் உண்டான கட்டளைகள் இன்னதென்றும், சமரசசுத்தசன்மார்க்கமரபு இன்னதென்றும், தெரிந்துகொண்டாலல்லது, பொய்யினாற் புனைந்திருக்கும் கதைகள் மேற்படி விளம்பரத்தில் இன்னவையென்று புலப்படுவது அரிதாகையால், டிரஸ்டி சிவாசாரியாரென்று போலிப்பெயர் புனைந்தவருடைய வரலாற்றை, முதல் ஒருவாறு, சுருக்கிச்சொல்வதை நேயர்களே ஒவ்வொருவரும் உற்றுக்கவனியுங்கள்

இவர் ஆதியில் செப்பாக்கத்துக்கடுத்த ஓர் குக்கிராமத்தில் ஐயனார்கோயிலில் பூசைசெய்துகொண்டிருந்தவர் இவருக்கு அத்தொழிலில் தக்கவரும்படியில்லாமை தரித்திரம்றத்தி விருந்தபடியால், மழைச்சாமியென்பவர் ஒருவரை அடுத்து, வைத்தியங்கற்றுக்கொள்வதாய் அபிநயங்காட்டி, அவருடன் கடந்த சுக்கில வருடம் வைகாசி மாதத்தில் மேற்படி தருமச்சாலைக்குவந்து நாலு ஐந்து தினமிருந்து போய்விட்டனர். மேற்படி வள்ளலார் மேட்டுக்குப்பம் என்றும் சித்தி விளாகத்தில் எல்லாம் சித்தத்திருக்கோலத்துடன் வெளிப்பட்டு இறந்தவர்களையெல்லாம் எழுப்பப்போகிறதாக வெளிப்படுத்திய பத்திரிகைக்கிப்பின், தன் தந்தையை சமாதிசெய்துவிட்டு குடும்பசமேதராய் மேற்படி தருமச்சாலைக்கு வந்தனர் அக்காலத்தில் இவருடைய நிலைமையோ நெருக்ககாலமாக வள்ளலாரைச்சூழ்ந்திருந்த அநேகசெல்வந்தர்கள் அக்காலத்தில் நடந்தேறிவந்த கட்டடங்களுக்கு வேண்டியபொருளுதவி செய்யவும் ஏழை

னுகரு அன்னவிரயஞ்செய்யவு மிருந்த செல்வவந்தர்களில் இவரும் ஒருவராகவிருப்பாரா; இல்லை—அல்லது அநேக அபிமானிகள் அக்காலத்தில் நடந்தேறிவந்த காரியங்களுக்குக் காரியஸ்தர்களாக ஏர்ப்பட்டு காரியங்களை நடத்திக்கொண்டு வந்தார்கள் அப்படிப்பட்ட காரியஸ்தர்களில் இவர் ஒருவராக இருப்பாரா, இல்லை—அல்லது சுவாமிகளுடைய விவகார காலத்தில் கல்வித்திறமுடைய அறிவுடையோர்கள் அனேகர் சூழ்ந்துக்கொண்டு அற்புதமான விவகாரங்களைக்கேழ்க்கவும் சந்தேக விபரீதங்களைக் கேட்டுத்தெரிந்துக்கொள்ளவும் சக்தியுடையவர்களாக இருந்தார்கள் அப்படிப்பட்டவர்கள் இவர் ஒருவராக இருப்பாரா; இல்லை—அல்லது அனேக குடும்பங்கள் ஏழைகளுக்குபபோடும்போது சாப்பாட்டையெதிர்பாராமல் தங்கள் சொந்தப்பொருளைக்கொண்டு ஜீவித்திருந்தார்கள் அப்படிப்பட்டவர்களில் இவா ஒருவராக இருப்பாரா; இல்லை ஆனல் இவர் சரித்திரந்தான எப்படிப்பட்டது. "உடுக்கவோ ஒருகந்தைக்குமேயில்லை, உண்ணவோ வுணவுக்கும் வழியில்லை." என்னும் வாக்கியப்பொருளாகவிருந்து ஏழைகளைப போல் இவரும் பொதுவிடத்தில் படிவாங்கிக்காலக்ஷேபஞ்செய்துகொண்டுவந்தார். சிலதினத்திற்குப்பின் தானும் வள்ளலார்சமுகத்தில் ஒரு தொழிலாளியாகவிருக்க வெண்ணங்கொண்டு, வள்ளலார் இருந்த அறையில் ஒரு இரும்புபெட்டியிருந்தன, அதற்குப்பிரதிதினமும் தோத்திரங்களோடு வலம் வந்து தீவார்த்தனை செய்துகொண்டு, ஒருனாள் இவர் தனக்கு ஜாதிசமயமுதலானபேதங்கள் இல்லையென்றும் தான் பிரதிதினமும் மேற்படி பெட்டிக்கு தீவார்த்தனைசெய்வதாய் விண்ணப்பித்துக்கொண்டார், அப்படியிருந்தால் செய்யலாமென்றார்கள், அத்தருணம் இவர் தன் ஆசாரங்களைவிட்டு பூணூல் முதலியதை நிவர்த்திசெய்து, பிரதிதினம் சாயந்திரம் பார்வதிபுரத்திலிருந்து வள்ளலார் இருப்பிடமாகிய மேட்டுகுப்பத்

சிற்றுப்போய், தீவார்த்தனைசெய்துவிட்டு உடனே தன் இருப் பிடத்திற்கு போய்விடுவார், இவர் போகாதகாலத்தில் நேர்ந்த வர்களும் தீவார்த்தனைசெய்வதுண்டு, வள்ளலார் இரண்டரை வருடகாலமாக அல்லும்பகலும் செய்துக்கொண்டுவந்த அற் புதமான விவகாரங்களை இவர் நேரில் கேட்டறிந்தது கொஞ் சந்தான், ஆனால் கேட்டவர்களிடத்திற்கேட்டுக் கிஞ்சித்துத் தெளிந்தார். வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொள்ளும் கொஞ்ச தினத்திற்குமுந்தியே இவருடைய தீவார்த்தனைத்தொழிலும் நின்றது, வள்ளார் திருக்காபபிட்டுக்கொள்ளுந் தருணத்தில் வேட்டவலம் ஜமீன்தார் அப்பாவு பண்டாரியென்பவர், தன் ஜமீனுக்குப்போயிருந்தபடியால், ஜமீன்தார் இன்னம் வர வில்லையாயென்றார்கள், அதைககேட்டிருந்த இவர் உடனே ஜமீனுக்குப்போய் வள்ளலார் சொல்லாத சிலகற்பனையான வார்த்தைகளை அவருககுச்சொல்லி, வீண தொந்திரவைக் கொடுத்து அழைத்துககொண்டுவந்தார, அதை வள்ளலார அறிந்து இவரை நோக்கி "நூலெனிலோ கோல்சாயும்" என்றவாக்கியத்தைச்சொல்லி, பிராமணாகள் தவிர மற்ற இதர ஜாதியாருக்கு இந்ததுணிவு வாராதெனறாாகள, இவ ருடைய சவகாசத்தினால் மேற்படி ஜமீன்தாரருக்கு, கெடு தலை நேரிடுமென்பதாகயெண்ணி, இவரை உடனே ஊருககுப போய்விடும்படி கட்டளையிட்டார்கள். இச்சொல்லைக்கேட்ட இவர் நாணமுற்று, வள்ளலார் திருக்காப்பிட்டுககொள்ளும் வரையில், வெளி ஊர்களில்போய் சஞ்சாரம் செய்துக்கொண் டிருந்து, திருக்காப்பிட்டுக்கொண்ட மூன்றுநாள் சாலையைவந்து சேர்ந்தார் வள்ளலார் திருக்காப்பிட்டுக கொள்ளுங்காலத்தில் அருகாமையிலிருந்ததாகப் பெருமையாகப் புகலுவார் அது பெரும்புளுகே.

இந்த புண்ணியபுருஷர் சாலையை வந்துசேர்ந்த 15-தினத்திற்குள் "நாலேனிலோ நோல்சாயும்" என்று சொன்ன வாக்கியத்தின்படி வள்ளலாருடைய உத்திரவின்படி, சில ஏழைகளைக்கைவிடாமல் காப்பாற்றிக்கொண்டிருந்த, ஜமீன்தாரையும், அவர் உத்திரவின்படி நடத்திக்கொண்டிருந்த காரியஸ்தருடைய மனத்தையும், கெடுத்து பாதுகாத்துக்கொண்டிருந்த ஏழைகளை முற்றுங்கைவிடச்செய்து, ஜமீன்தாரருக்கு காரியஸ்தராகயிருந்த கனகசபை பிள்ளையென்பவர் மூலமாக, ஜமீன்தாரரை தன்வசப்படுத்திக்கொண்டு, இவர் சமரசசன்மார்க்க மரபில் விழுந்து பாபியாய் விட்டாரென்று இவருடைய இனத்தார் நீக்கிவைத்திருந்தார்கள், அப்படிப்பட்டவர்களையெல்லாம், தான் வசப்படுத்தி, தான் முன்னுக்குச்செய்யப்போகிற, தன் சொந்த கிரக கிர்த்தியங்களில், அவர்கள் விரோதஞ்செய்யாமல் உடன்பட்டுநடத்த, அவர்களுக்குப் பொருளாசைக் காட்டி வசப்படுத்து நிமித்தம், மேற்படி ஜமீனில் ஒரு ஆலயத்திற்கு கும்பாபிஷேகஞ்செய்யத் தந்திரமாக உடையவர்களைத் தூண்டி, விரோதப்பட்டிருந்த இனத்தாராகிய குருக்கள்மார்களையெல்லாம் வரவழைத்து, அந்த ஜமீனுக்குவேண்டிய செலவு வைத்து, அந்த குருக்கள்மார்களுக்கு வேண்டியபொருளுதவி செய்வித்தார். மேலும் அந்த ஜமீன்தாரருக்குச்சந்ததியில்லாமையிருந்தபடியால், நவக்கிரகசாந்திசெய்வித்தால் சந்ததியுண்டாகுமென்று ஆசையைககாட்டி, பணத்தாசையினால் வசப்படுத்த வேண்டியதிருந்த குருக்கள்மார்களையெல்லாம் வரவழைத்து அவர்களுக்குவேண்டிய பொருளுதவி செய்வித்தார். இப்படிப பட்ட பலதந்திரத்தால், தன்னை நீக்கிவைத்திருந்த குருக்கள்மார்களையெல்லாம் வசப்படுத்தி, ஜமீன்தாரரால் வேண்டிய பொருளுதவிபெற்று, இராமேசுவரமுதலான விடங்களுக்குபபோய், தான் சன்மார்க்கத்தில் நின்றதோஷத்திற்காக பிராயச்சித்தஞ் செய்துக்கொண்டுவந்து, பலவித தந்திரத்தால்

பிரயோஜனஞ்செய்வித்து வசப்படுத்திவைத்திருந்த குருக்கள் மார்களையெல்லாம் வரவழைத்து, தான் சிவாசாரியார் பட்டம் பெற்றுக்கொள்ள, மேற்படி பார்வதிபுரத்தின் எல்லையில், பந்தல் முதலானதும் போடத்தொடங்கினார். அப்போது அங்கிருந்த சில அபிமானிகள், இவர் மார்க்கத்திற்கு விரோதமாகப்பிராச்சித்தஞ் செய்துகொண்டபடியால், சபை முதலான விடங்களில் இவரை தீவார்த்தனைச் செய்விக்கப்படாதென்றும், மேலும் இது யாவருக்கும் பரமாசாரியர் ஸ்தானமானபடியால் இந்தவிடத்தில் இவர் போலி ஆசாரியர் அபிஷேகஞ்செய்துக் கொள்ளப்படாதென்றும் ஆக்ஷேபித்தார்கள், அப்போது இவர், தன் பெண்ணை விவாகஞ்செய்து கொடுக்குநிமித்தம், இப்படிப்பட்ட மாறுனவேடங்களைப் பூண்டுவதாயும் பெண்ணுக்குவிவாகம் முடிந்தபின், உங்களில் நானும் ஒருவனாக இருப்பேனென்று, இதமான வார்த்தைகளாலும், பேதமற்ற சமரசசெய்கைகளாலும், அவர்களை மயங்கச்செய்து, தான்செய்துக் கொள்ளப்போகிற போலி ஆசாரி அபிஷேகத்திற்கு, மேற்படி ஜமீன்தாரிடம் மறுபடியும் பொருளுதவிபெற்று, பொருளாசைக்காட்டி வைத்திருந்த தன் இனத்தாரையெல்லாம் வரவழைத்து, போலி ஆசாரியர்பட்டம் பெற்றுக்கொண்டார் பெற்றுக்கொண்ட கொஞ்சதினத்திற்கெல்லாம் மறுபடியும் ஜமீன்தாரிடம் பொருளுதவிபெற்று, பெண்ணின் விவாகத்தையும் முடித்துக்கொண்டார். இவர் மயக்கவலையில் அகப்பட்ட அந்த ஜமீன்தார், வள்ளலார் சொன்ன புண்ணிய கயிங்கரியத்தைமறந்து, அவர் காலபரியந்தம் எல்லாவுதவியும் இவருக்கே செய்யப்புகுந்து, பொருள் நஷ்டதைக்கண்டார்.

நேயர்களே இந்த குருக்கள் அருணந்தி சிவாசாரியார் பட்டம் சிரசில்தரித்துக்கொண்ட கொஞ்சதினத்திற்கெல்லாம் இவர்தான் முன்னின்றிருந்த நிலையிலிருந்து மாறுபட்டு, இவர் அந்த விடத்தை அபிமானித்திருந்தவர்களிடத்திலிருந்த சகசத்

தையுமறந்து, நெடுநாள்கட்டி மறைத்துவைத்திருந்த காசுபரிக்கும் வேடத்தைப்பூண்டு, சமரசசுத்தசன்மார்க்க மரபை விளக்கிக்காட்டவந்த ஞானசபையில், வள்ளலார் திருவாக்கிற்கு விரோதமாக "நாலெனிலோ நோல்சாயும்" என்று இவருக்குச் சொன்னவாக்கியத்தை பரிபாலனஞ்செய்ய ஞாலவேடத்தைக்காட்ட ஆரம்பித்தார்.

இவர் ஜாலங்காட்டும் ஞானசபை விஷயமாக வள்ளலார் திருக்கரத்தால் எழுதிக்கொடுத்த பத்திரிகை இதனடியில் வருமாறு காண்க.

## அருட்பெருஞ்சோதி.

— — () ———

அன்புடைய நம்மவர்களுக்கு வந்தனம் இன்றுதொடங்கி சபைக்கு, சமரசசுத்தசன்மார்க்க சத்தியஞான சபையென்றும், சாலைக்கு, சமரசசுத்தசன்மார்க்க சத்திய தருமச்சாலையென்றும், சங்கத்திற்கு, சமரசசுத்தசன்மார்க்க சத்திய சங்கமென்றும், திருப்பெயர் வழங்கல்வேண்டும். இன்றுதொடங்கி அருட்பெருஞ்சோதி ஆண்டவரது அருட்பெருஞ்சித்தி வெளிப்படும் வரைக்கும், ஞானசபைக்குள்ளே தகரக்கண்ணாடி விளக்கு வைத்தல்வேண்டும், பித்தளை முதலியவற்றால் செய்த குத்துவிளக்கு வேண்டாம் மேலேற்றுகிற குளோபமுதலிய விளக்குகளும்வேண்டாம், தகரக்கண்ணாடி விளக்கு வைக்குங்காலத்தில் தகுதியுள்ள நம்மவர்கள் தேகசுத்தி, கரணசுத்தி யுடையவர்களாய், திருவாயிற் படிபுறத்தி லிருந்துகொண்டு விளக்கேற்றி, பன்னிரண்டு வயதிற்குட்பட்ட சிறுவர் கையிற் கொடுத்தாவது, எழுபத்திரண்டு வயதிற்கு மேற்பட்ட பெரியர் கையிற்கொடுத்தாவது, உட்புறவாயல்களுக்குச் சமீபங்களில் வைத்துவரச்செய்விக்கவேண்டும். நாலு நாளைக்கு ஒருவிசை காலையில் மேற்குறித்த சிறியரையாவது கொண்டாயினும், பெரியரைக்

கொண்டாயினும், உள்ளே தூசு துடைப்பிக்கவேண்டும். தூசு துடைப்பிக்கப்புகும்போது, நீராடிச் சுத்தத்தேகத்தோடு கால்களில் வத்திரஞ்சுற்றிக்கொண்டு புகுந்து, முட்டிக்காலிட்டுக்கொண்டு தூசு துடைக்க செய்விக்கவேண்டும், விளக்கு வைக்கின்றபோதும் இங்ஙனமேசெய்விக்கவேண்டும், விளக்கு வைத்தற்கும் தூசு துடைத்தற்கும் தொடங்குகின்ற பன்னிரண்டு வயதிற்குட்பட்ட சிறுவரும் எழுபத்திரண்டுவயதிற்கு மேற்பட்ட பெரியரும் பொருளிடம்போகம் முதலியவற்றில் இச்சை சிறிதும் இல்லாதவர்களாய், தெய்வ நினைப்புள்ளவர்களாய், அன்புடையவர்களாயிருத்தல்வேண்டும், விளக்கு வைக்கும்போதும் தூசுதுடைக்கும்போதும் நம்மவர்களில் நேர்ந்தவர்கள், புறத்தினின்று பரிசுத்தராய் மெல்லெனத்துதிசெய்தல் வேண்டும், யாவரும் யாதொருகாரியங்குறித்தும் எக்காலத்தும் உள்ளேபோதல் கூடாது, ஞானசபைத்திறவுகோலை ஒருவர்கையிலும் வெளிப்படவிருக்கப்படாது. அத்திறவுகோலைத் தனியொரு பெட்டிக்குள்வைத்து, அப்பெட்டியைப்பூட்டி, பொற்சபைக்குள் வைத்து அப்பெட்டித்திறவுகோலை ஆஸ்தானக் காவலுத்தரவாதியாயிருக்கின்றவர்கையில் ஒப்புவித்தல்வேண்டும்.

தொடர்ச்சிகால் நேர்ந்ததருணம் எழுதுகின்றனம்.

ஆங்கீரச-௵
ஆடி-மீ 5-உ.

இங்ஙனம்,
சி. இராமலிங்கம்.

மேற்படி பத்திரிகையின்படி சிலமாதம் நடந்துக்கொண்டு வந்தது, வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொள்ளும் தினத்திற்குமுன், மேற்படி சபையை மூடிவிட்டு சாவியைக்கொண்டு வந்து கொடுக்கும்படி வாங்கிக்கொண்டு, ஆண்டவர் வருங்காலத்தில் சபையானது தானே திறந்துகொள்ளும், அப்போது அந்த அற்புதமான கட்டடமாகத்தோற்றும், அப்போது எல்லா அற்புத சித்திகளும் நடக்குமென்றார்கள். வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொண்டபின், மேற்படி சபையானது மூன்றுவருஷம் வரையில் மூடியிருந்தது, அதை யென்னத்திற்கு மூடிவைக்கச்சொன்னார்களோ அந்த அந்தத்திருவுள்ளத்திறமே தெரியும் அப்படியிருக்க வெகுதானிய-ஸூ சித்திரை மாதம் முதல் தேதியில், அங்கிருந்த சாலை அபிமானிகளில் ஆறுபேர்கூடி, சபையைத்திறந்து பிரதிதினமும் தோத்திரமும், பிரதிமாத பூசத்திற்குத் தீப அலங்காரத்தோடு தோத்திரமும், இன்னும் இப்படிப்பட்ட சில ஏற்பாடுகளை அவர்களுக்குள், பிரமாணமாகச் செய்துகொண்டு, நடத்த ஆரம்பித்தார்கள். வள்ளலார் உத்திரவின்படி மூடிவைத்திருந்த சபையைத்திறந்ததே பெருங்குற்றம், அந்த சபை யெப்படிபோனாலும் நமக்கென்ன அதன்பேரில் மூடிவைக்கச்சொன்ன வள்ளலாருக்கு இல்லாதபொறுப்பு நமக்கில்லை, அல்லது திறந்தவர்களாவது வள்ளலார் திருக்கரத்தால் எழுதிக்கொடுத்த மேற்படி பத்திரிகையின்படியாவது நடத்தவேண்டும், அதையும்விட்டார்கள் சபையைத்திறந்த ஆறுபேரில் இந்தக்குருக்களும் ஒருவராதலால் சபைவிஷயமாய்த்தான் நக்க வரும்படியைச்செய்வித்து, சபைகாரியங்களைத் தடையில்லாமல் நடத்திக்கொண்டு வருவதாய மற்ற ஐவர்களுக்கும் இவர் அபிநயங்காட்டி, அவர்களிருவிறவரையில் மாறுபாடில்லாமல், அவர்கள் ஏற்பாட்டின்படி நடத்திக்கொண்டுவந்தார் சபையைத்திறந்த ஆறுபேரில் சபைவிஷயத்தில் முக்கியமாகக் கவனித்துக்கொண்டிருந்த மூவர் காலமாய் விட்டார்கள், அவர்கள் இறந்தபின் ஒருவர்தான்பெற்ற சிவாசாரியார் பட்டத்திற்குத்தக்கபடி மெல்ல

மெல்ல சபையை வள்ளலார்கட்டளைக்கு விரோதமாக அடியோடேபுரட்ட ஆரம்பித்தார்.

இவர் புரட்டிய ஒவ்வொருசங்கதியும் இதனடியில் வருமாறு காண்க.

சபைவிஷமாய் வள்ளலார் திருக்கரத்தால் எழுதிக் கொடுத்தபடி பத்திரிகையில்.

"இன்று தொடங்கி சபைக்கு சமரச சுத்தசன்மார்க்க சத்தியஞானசபை யென்று வழங்கல்வேண்டும்" என்றார்கள்.

இப்போது சிவாசாரியார் பட்டத்தைத் தரித்துக்கொண்ட இவர், சபைகட்டடம் மானியஞ்செய்யப்புகுந்து, அந்தத்திருவருள் வாக்கிற்கு விரோதமாக "ஞானானந்தவல்லி ஆனந்த நடராஜர் வீற்றிருக்கும் சபை" யென்று அடியோடே பெயரைப் புரட்டிவிட்டார்.

மேற்படி பத்திரிகையில் "இன்றுதொடங்கி அருட்பெருஞ்சோதி ஆண்டவரது அருட்பெருஞ்சித்தி வெளிப்படும் வரையில், திருவாயிற் படிப்புறத்தில் தகரக்கண்ணாடி விளக்கு வைத்தல்வேண்டும், பித்தளை முதலியவற்றாற்செய்த குத்து விளக்குகளும் மேலேற்றுகிற குளோப்புகளும் வேண்டா" மென்றார்கள்.

திருவாயிற்படிப்புறத்தில் தகரக்கண்ணாடி விளக்குவைத்தல் வேண்டுமென்பதற்கு விரோதமாக, மூலஸ்தானத்தில் ஒரு நிலைக்கண்ணாடியை நாட்டி, அதற்குள் ஒரு அகண்டத்தை வைத்து, பித்தளை முதலியவற்றாற்செய்த குத்துவிளக்குகளாலும், மேலேற்றுகிற குளோப்புகளாலும், அலங்காரஞ்செய்து, திரையைத்தூக்கி இதுவரையில் யாரும்பாராத அற்புதமான தீபத்தைக்காட்ட ஆரம்பித்தார். சுத்த சன்மார்க்கத்திற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணமேயல்லது அப்பிரத்தியக்ஷ பிரமாணமில்லையென்று வள்ளலார்சொல்லுக்கு இது விரோதமே.

மேலும் "திருவாயிற் படிப்புறத்திலிருந்து, விளக்கு வைக்கப்பட்டவர்கள் 75 வயதிற்கு மேற்பட்டவர்கள், அல்லது 12 வயதிற்குட்பட்டவர்கள், கரணசுத்தி, தேகசுத்தி யுடையவர்களாயும், போகமுதலியவற்றூற் சிறிதும் இச்சையில்லாதவர்களாய், தெய்வ நினைப்புள்ளவர்களாய், அன்புடையவர்களாயிருத்தல்வேண்டும், யாவரும் யாதொருகாரியங்குறித்தும் தற்காலம் உள்ளேபோதல் கூடாது" என்றூர்கள்.

இப்போது மேற்சொன்னபடி இருக்கப்பட்டவர்கள் குருக்களுடைய வம்சத்தார்தான், மற்றவர்களுக்கு அந்ததரம் கிடையாது இல்லாதிருந்தாலும் இவருக்கு காசி சித்தியாறல் பெண்களும் உள்ளே பிரவேசித்துப் பார்க்கலாம்.

மேலும் மேற்படி பத்திரிகையில் விளக்கு வைக்கும் போது, தூசு துடைப்பிக்கும்போதும், நம்மவர்களில் நேர்ந்தவர்கள், புரத்தில்நின்று பரிசுத்தராய், மெல்லென துதிசெய்தல் வேண்டும் என்றூர்கள். இதற்கு விரோதமாக இவர் திரை தூக்கி நிலைக்கண்ணுடிக்குள் வைத்திருக்கும் அற்புதமான தீபத்தைக்காட்டும்போது ஒருபக்கம் பரிசுத்தமான பிராமணகும்பல்கள் வேதகோஷ்டஞ் செய்கிறூர்கள், மற்றொருபக்கம் தோத்திர கும்பல்கள் பெருங்கூச்சலிடுகிறூர்கள், ஒருபக்கம் பிட்டிலும் மத்தள ஓசையும், ஒருபக்கம் மணிகளின் ஓசை, ஒருபக்கம் பிரமதாளத்தின் ஓசை, ஒருபக்கம் நகார் ஓசை, ஒருபக்கம் கண்டாமணியின் ஓசை, ஒருபக்கம் நாகசுரத்தின் ஓசை, ஒருபக்கம் வெடி ஓசை, இந்த ஓசைகளால் பூமி அதர்ச்சிகண்டு சபைக்குள் தூங்குகிற ஆண்டவரும் விழித்துக்கொள்ளுகிறூர். மெல்லென துதிசெய்தல் வேண்டுமென்பதற்கு இதுகள் நேர் விரோதம்.

வள்ளலாருடைய விவகாரகாலத்தில் சேர்ந்திருந்த கூட்டங்கள் பிட்டில் மத்தள முதலான கருவிகளுடன் தோத்திரஞ் செய்ய ஆரம்பித்தார்கள். சன்மார்க்கத்திற்கு இப்படிப்பட்ட விநோதங்கள் வேண்டியதில்லை. மன நெகிழ்ச்சியோடு தோத்திரஞ்செய்வதுதான் வழிபாடென்றார்கள். வெடியும் மனத்தைப் பிரமிக்கும்படியான சப்தத்தைத்தருவதால் அதுவும் வேண்டியதில்லையென்று இப்படிப்பட்ட ஆரவாரச்செய்கைகளெல்லாம் தடைசெய்துகொண்டிருந்தார்கள்.

மேலும் மேற்சொன்ன ஆறுபேருங்கூட, சபையைத்திறக்கும்போது இளைஞர் ஒரு பீடத்தைவைத்து அதன்பேரில் சரிகைகளால் அலங்கரித்த நல்ல அணைகளையும் திண்டுகளையும் வைத்து, அதை குருபீடமாகச்சிந்தித்து, பூசித்துவந்தார்கள். இப்போது இவர் அந்த பீடத்தில், மினுக்கும்படி ஒரு பதக்கத்தை தொங்கவிட்டு, அதன்கீழ் இரண்டு பாதங்களைச் செய்துவைத்து, அந்தபதக்கத்தின் சூழ ஆபரணங்களாலும், வஸ்திரங்களாலும், புஷ்பங்களாலும், விக்கிரகத்தைப்போல், அலங்காரஞ்செய்து, பிரதானமாக்கிக்காட்ட ஆரம்பித்தார். சென்ற தைப்பூசத்தில் சிலர் முன்னிலையில் இவர் சொன்னதாவது, இதுவரையில் சபையில் விக்கிரகத்தை வைத்திருப்பதாகச் சொல்லுவார்கள், அப்படியில்லை இனி கெந்தகச் செம்பையெடுத்து, அதின் குற்றத்தைநீக்கி, சொர்ணமாக்கி, நடேச விக்கிரகத்தைவார்த்து வைக்கப்போகிறதாயும் ஆண்டவர் சம்மதமும், அப்படியே யிருப்பதாகச்சொன்னாராம். நடராஜரைவைத்தபின், ஞானானந்தவல்லி அம்மையும், கைலாசத்திலிருந்து வரவழைத்து, நடராஜருக்குத் தேர்முதலானதும் செய்வித்து, மங்கலக்கோலஞ் செய்விப்பதாயும், விஷ்ணுமூர்த்தியை வைகுண்டத்திலிருந்து வரவழைத்து சபையில்வைக்கப் போகிறதாயும் சொன்னாராம். இனி இந்த சுவாமிகளெல்லாம் சபையில்வந்து விஜயஞ்செய்து வள்ளலார் திருவாக்கிலிருந்து வெளிப்பட்ட எல்லா அற்புத சித்திகளும் நடக்கப்போகிறபடி

யார்) இப்போதே அந்தசுவாமிகளின் விநியோகத்திற்கு, சபையில், தேங்காய்கள் உடைத்தார்-புஷ்பத்தால் அர்ச்சனைசெய்தார் மணி ஆட்டினுர்-சுவாமிகளெல்லாம் சபையில்வந்து விஜயஞ் செய்தால், அவர்களுக்குப் பிரதிதினமும் நைவேத்தியங்களுக்குப் பொருள்வேண்டுமே. அதற்கு உண்டி தவலையும்வைத்து விட்டார். சுவாமிகளெல்லாம் சபையில்வந்து விஜயஞ்செய்த பின், நம்போல் ஆன்மாக்களின் பக்குவத்திற்குத் தக்கபடி முத்தியைக்கொடுக்கவேண்டுமே, அதற்கு அந்தச்சபையை பஜனையோடு வலம்வரும்போது, தன்னைச் சூழ்ந்திருந்தவர்களை நோக்கி, சரிகை, கிரிகை, யோகம், ஞானம், இந்த நான்கையும் அநுஷ்டிப்பவர்கள், அடையும்படியானபத முத்திகளைக்கொடுக்கத்தக்க இடம் இது இதுவென்றுக்குறிப்பிட்டு, அந்த நான்கு விடத்திலும் பஜனையோடு நின்று, அங்கங்கே தேங்காய்கள் உடைத்து அர்ச்சனைசெய்து மணி ஆட்டி ஜாலங்காட்டினுர்.

இதன்றி வள்ளலார் இருந்தவிடத்தில் இரண்டு இரும்பு பெட்டிகளிருந்தன, அதில் ஒரு பெட்டிக்கி தீவார்த்தனை முதலான உபசாரங்கள் செய்துக்கொண்டிருந்தார்கள், வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொள்ளும் கொஞ்சதினத்திற்கு முன், தம்மைச்சூழ்ந்திருந்தவர்களைநோக்கி; இனி அந்தப்பெட்டியினிடத்தில் யாரும் லட்சியம் வையாதீர்கள், அதில் ஒன்றுமில்லையென்ருர்கள், இந்தப்பெட்டிகள் வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொண்ட அறையில் 4-வருஷம் வரையிலிருந்தது, அதையாருக்குந்தெரியாமலே களவு செய்துக்கொண்டுவந்து விட்டார், இவர் களவுசெய்த கொஞ்சநேரத்திற்குப்பின், அங்குள்ளவர்களுக்குந்தெரிந்து, இவரைத்தேட ஆரம்பித்தார்கள், மறைந்தார். அப்போது இவர்செய்த களவானகாரியத்திற்கு அத்தருணம் அங்கிருந்த அனேகர் அனேகவிதமான எண்ணங் கொண்டார்கள். மரபுக்கு விரோதமான காரியஞ்செய்யப் படாதென்று ஒருவருக்கொருவர் சமாதானவார்த்தைகளால்,

மௌனத்தையடைந்தார்கள் இல்லாவிட்டால அப்போதே இவர் இராஜாங்கத்தார் தண்டனைக்கு ஆளாக நேருப்பார், அந்தப் பெட்டிகளில் என்னவிருந்ததோ இவர் என்ன செய்தாரோ அதுதெரியாது, இப்போது அந்தப்பெட்டிகளை இவர் பெயரிட்டிருக்கும் பொன்னம்பலநாதர், வெள்ளியம்பலநாதர் இருக்குமிடத்தில்வைத்து, தைபூசத்தி அதில இரசகுளிகைகளிருப்பதாகச்சிலருக்குச்சொல்லி, திரையூக்கி ஜாலங்காட்டிக் கொண்டுவருகிருர் இதுவும் அந்த வள்ளலார் கட்டளைக்கி விரோதமே.

இதன்றி தங்கள் வீட்டின்முன் ஒரு பிள்ளையார்கோயில் கட்டி, காசியிலிருந்து கேட்டவரத்தைத் தரும்படியான ஒரு பிள்ளையாரை வரவழைத்ததாகச்சொல்லி, அதை மேற்படி கோயிலில்வைத்து, கும்பாபிஷேக முதலானதுஞ்செய்து, இப்போது பிரதிதினமும் மணி ஆட்டி பூசை நைவேத்தியமுதலானதுஞ்செய்துக்கொண்டு வருகிருர். இதுவும் வள்ளலார் கொள்கைக்கி விரோதமே.

மேலும் சாலை நிலங்களுக்கு அருகாமையில் ஒரு பெருமாள் கோயில்கட்டியிருக்கிருர் இனி அதில் பெருமாளை வைக்கப்போகிருர்.

இதன்றி தைபூசகாலத்தில், ஆலயங்களில் திருவிழாக் காட்சி நடத்துவதுபோல், மூன்று தினத்திற்குமுந்தியே ரிஷபவரணக்கொடியை நாட்டி, பிராமணகும்பல்களைச் சேர்த்துக் கொண்டு, ஒருகலசத்தைநாட்டி, அதை மந்திர ஆவாகனத்தால் உயிர்ப்பித்து, மேற்படி பிராமணகும்பல்களால்வேதகோஷ்டஞ் செய்வித்து, அந்த கோஷ்டத்துடன் அந்தக்கலசத்தை சபைக்குள்வைத்து, இவருடைய திருவிழாபரியந்தம், அந்தப்பிராமண கும்பல்களைக்கொண்டு, சபையில் ஓமத்தைவளர்த்தி வேதபாராயணஞ் செய்விக்கிருர் இதுவும் விரோதமே

இதன்றி சபையில் ஓமத்தைவளர்த்தி பிள்ளையில்லாதவர்களுக்குப் பிள்ளைவரங்கொடுக்கவும், பேய்பிடித்தவர்களுக்குப் பேய் ஓட்டவும் ஆரம்பித்தார்.

இவர் அங்கே பிள்ளையாரகோயில் கட்டியதற்குக் காரணம் வள்ளலார் சாலையிலிருந்தபோது பிள்ளையார்கோயில் சுப்பிரமணியர்கோயில் இதுமுதலானதும் கட்ட அஸ்திவாரம் போட்டிருப்பதாயும், அதற்கு பிளான்முதலானதும் ஏற்பட்டிருப்பதாயும், அதைத்தான் கட்டி பூர்த்திசெய்ய ஆண்டவர் வந்து இவருடைய பரிசுத்தமான தேகத்தில் நுழைந்து சொற்பனத்தில் சொல்லுவதாயும், சொல்லுகிறார். இவருடைய சொற்பனப்பிதற்று உண்மையாகவிருந்தால், எல்லாம் வல்லக் கடவுள், சித்தத்திருக்கோலத்துடன் வெளிப்பட்டு, இவ்வுலகின் கண்ணே சுத்தசன்மார்க்கத்தை விளக்கஞ் செய்யப்போகிறதாகக் குருமுகூர்த்தமாக எழுந்தருளியிருந்தவள்ளல், பாசுரங்களாலும், விவகாரங்களாலும், பறையடித்திருக்கும் வாக்கியங்களெல்லாம் பொய்யே; பொய்சொல்லாத இந்த சத்தியர் சொற்பனப்புளுவு மெய்யே.

நேயர்களே எல்லாம் வல்லசித்தன் திருக்கோலத்துடன் வெளிப்பட்டு, சமரச சுத்தசன்மார்க்கத்தை இவ்வுலகின் கண்ணே நாட்டப்போகிறதாகச் சொன்ன வள்ளல். "சமரச சுத்தசன்மார்க்கம்" என்பதற்குப்பொருள் விளக்கிக்காட்டியதை இதனடியிற்காண்க.

சமரசமென்பது எல்லா அந்தங்களினது அந்தமுந் தனக்குப் பூர்வமாக்கி தான் உத்தரத்தில் நின்று மருவியதால் சமரசமாச்சுது. இதற்கு நியாயம்.

விந்து பரவிந்து இவ்விரண்டையும் மறுக்க சுத்தவிந்து வந்ததுபோலும், சிவம் பரசிவம் இவ்விரண்டையும் மறுக்க சுத்தசிவம் ஆனதுபோலும், சமயசன்மார்க்கம் மதசன்மார்க்கம் இவ்விரண்டையுமறுப்பது சுத்தசன்மார்க்கம்.

சுத்தமென்பது ஒன்றுமல்லாதது ஆதலால் சுத்தமென்பது சன்மார்க்கமென்னுஞ் சொல்லுக்கு முன்வந்ததால், சமய மதங்களின் அநுபவங்களைக்கடந்தது இதன்பொருட்டே சமரசசுத்த சன்மார்க்கமென்று சொல்லப்பட்டதென்றார்கள்.

மேலும் "நான்முதலில் சைவசமயத்தில் லட்சியம் வைத்துக்கொண்டிருந்தது, இவ்வளவென்று அளவு சொல்ல முடியாது, அந்த லட்சியம் இப்போது எப்படி போய்விட்டது, நான்லட்சியம் வைத்திருந்ததற்குசாக்ஷி வேறேவேண்டியதில்லை, நான் பாடியிருக்கும் திருவருட்பா புத்தகமேபோதும், அப்போது அவ்வளவுகொஞ்சம் அற்ப அறிவாக இருந்தது, இப்போது அதை விட்டதினால், ஆண்டவர் என்னை ஏறாதமேனிலைமேல் ஏற்றினார், அந்தசமயத்தில் வைத்திருந்த லட்சியந்தான் இந்த நிலையில் என்னை தூக்கிவிட்டதென்றாலோ, அந்த லட்சியம் தூக்கிவிடவில்லை, என்னை இந்த இடத்திற்குத் தூக்கிவிட்டது தயவுதான், தயவுக்கு ஒருமைவேண்டும், ஒருமையிருந்தால்தான் தயவுவரும், தயவு இருந்தால்தான் பெரியநிலையில் ஏறலாம், தயவை விர்த்திசெய்வதற்குத் தடையாக இருப்பது, சாதி, சமய, முதலானவைகள், இவைகளைவிட்டு பொதுநோக்கம் வந்தாலொழிய தயவு விர்த்தியாகாது என்றார்கள்."

மேலும் "இப்போதிருக்கும் வேதாகமபுராண இதிகாச முதலான கலைகள் யாவையிலும் லட்சியம் வையாதீர்கள், அதுகளில் ஒன்றிலாவது தெய்வத்தின் உண்மையை கொஞ்சமேனும் சொல்லாமல், மண்ணைப்போட்டு மறைத்துவிட்டு

கைலாசபதி யென்றும், வைகுண்டபதி யென்றும், சத்திய லோகாதிபதி யென்றும், பெயரிட்டு சாதாரண மனுஷனைப் போல் கையுங்கால் முதலான அவயவங்களிருப்பதாய், கற்பிக்கிறார்கள். கடவுள் ஆன்மவியாபகமாகிய மனித தேகத்தில் காரியப்படுவது உத்தமமாக இருக்க, விக்கிரக பூதாதிமுதலிய வைகளில் வெளிப்படுத்திக்கொள்வது மந்த நியாயம், அதில் தோன்றி அநுக்கிரகிப்பதாகச் சொல்வது ஜாலம்" என்றார்கள்.

மேலும் "பேருற்ற உலகிலுறு சமயமதநெறியெலாம் பேய்" பிடிப்புற்ற பிச்சுப்பிள்ளை விளையாட்டெனவுணர்ந்திடாதுயிர்கள் பலபேதமுற்றங்குமிங்கும் போருற்றிறந்து வீண்போயினாரின்னும் வீண்போகாதபடிவிரைந்தே புனிதமுறு சுத்தசன் மார்க்க நெறிகாட்டி மெய்ப்பொருளினையுணர்த்தி யெல்லாம் ஏருற்ற சுகநிலை யடைந்திடப்புரிதி நீ யென்பிள்ளை யாதலாலே, யிவ்வேலைபுரிக வென்றிட்டனன் மனத்தில் வேறெண்ணற்க வென்ற குருவே. நீருற்ற வொள்ளிய நெருப்பே நெருப்பினுள்ளிறைந்திருள கற்றுமொளியே நிற்குணமந்த பரநாதாந்தவரையோங்குநீதி நடராஜபதியே.

மேலும் "குறித்துரைக்கின்றே னிதனைக்கேண்மினிங்கே வம்மின் கோணுமனக்குரங்காலே நாணுகின்றவுலகீர். வெறித்தவுமமாலொருபயனும் வேண்டுகிலேனெனது மெய்யுரையைப் பொய்யுரையாய் வேறு நினையாதீர், பொறித்தமதம் சமயமெலாம் பொய் பொய்யேயவற்றில் புகுதாதீர் சிவமொன்றே. பொருளெனக்கண்டறிமின், செறித்திடு சிற்சபை நடத்தைத் தெரிந்து துதித்திடுமின் சித்தியெலா மித்தினமே சத்தியஞ் சேர்ந்திடுமே."

மேலும் இப்போது இவர் விக்கிரகங்களைவைத்து தெவஸ்தானமாக்குவதற்கு ஜாலங்காட்டும் சபையில்யாவரும் துதிப்பதற்கு "சமரச சுத்தசன்மார்க்க சங்க சத்திய விண்ணப்பம்

என்று ஒரு விண்ணபபம் எழுதிக்கொடுத்தார்கள்" இதை ஆறவது திருமுறையில் பார்க்கலாம் "இதில்" எல்லாமுடைய அருட்பெருஞ்சோதி அப்புதக்கடவுளே; இது தொடங்கி யெக்காலத்தும் சுத்தசன்மார்க்கத்தின் முக்கியத்தடையாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும், வருணம் ஆசிரமமுதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்திற்பற்றுதவண்ணம் அருள்செய்தல்வேண்டும்" என்றர்கள்.

இப்படியெல்லாம் பயிரங்கத்தில் சொன்ன வள்ளலா இவருக்குமாத்திரம் தனித்து சொற்பனத்தில்வந்து சபையில் நடேசனை வைக்கவும் கணபதிக்கும் சுப்பிரமணியருக்கும் பெருமாளுக்கும் கோயில் கட்டும்படியாகச்சொன்னுர். ஆனல் அவர் வஞ்சனையுள்ளவரே. இவர் வள்ளலாரிடத்தில் வந்து அடுத்தகாலத்தில் சாதி சமயமுதலான பேதங்கள் தனக்கில்லை யென்று பூணநூல் முதலானதும் அறுத்துப்போட்ட இவர், பழயகுருடி கதவைத்திறவடி யென்றவாக்கியத்திற்கு ஒப்பாக, மருபடியும் இவர் வேடந்தரித்துக்கொண்டது என்னை? இவர் சிவாசாரியார்பட்டம் தரித்துக்கொண்டவுடனே, இவருடைய சிவாநுபவத்தில், வள்ளலார் சொன்ன சமரசசுத்த சன்மார்க்கத்தைவிட, மேலானமார்க்கம் ஒன்று தோற்றப்பட்டது, அது இதுவரையில் உலகத்தில் இல்லை, அது எது? சபையில் ஸ்வர்ன வில்வமாலைசாத்தி நடேசனைவைத்து ஞானுனந்தவல்லி அம்மையை நடேசருக்கு கல்யாணஞ்செய்வித்து, கணபதியையும், சுப்பிரமணியனையும், பெருமாளையும் ஸ்தாபித்து, உலகறிய திருவிழா செய்விப்பதேயாம். அந்தகாலத்தில் இந்தசிவாநுபவச்செல்வர் ஏதேனும் அற்புதத்தைக்காட்டுவரோ. காட்டுவார். என்ன அற்புதத்தைக்காட்டுவார். ஆண்டவர் சித்தத் திருக்கோலத்துடன் வெளிப்படும்போது இறந்தவர்கள் எல்லாம் எழுந்திருப்பார்களென்றுர்கள் இவருடைய திருவிழாக்

காலத்தில் இருப்பவர்களெல்லாம் நூறுபாகங்கள் ஆனல் அதை விட இது விசேஷ அற்புதமே அது பின்னால் நடப்பது இருக்கட்டும் இப்போது வள்ளலார் சமரசசுத்த சன்மார்க்கத்தை நிலைநாட்டவந்த இடத்தில் இவர் அதற்கு மாறுனகாரியங்களைச் செய்வாரேயானுல் அந்தவாக்கிலிருந்து ததும்பி வழிந்திருக்கும் மேற்சொன்ன மஹாவாக்கியங்களுக்கெல்லாம் இவர் கேட்டவர்களுக்கு என்ன விடைகொடுப்பார். முழு பூசணிக்காயை இவர் உண்ணுஞ்சோற்றில் மறைப்பரோ, மறையாது. அல்லது மேற்சொன்ன வாக்கியங்களுக்கெல்லாம் வேரேவிதி கற்பிப்பரோ, கற்பிக்கமுடியாது. அல்லது அவர் சொன்ன வாக்கியங்களல்லவென்பரோ சொல்லமுடியாது ஆனுல் பின் என்னதான்சொல்வார், விழிப்பார், இது அறியாமைதான். என்னசெய்யலாம். யாரும் இல்லாத ஊரில் அஸ்வமேதயாகஞ் செய்யப்புகுவதுபோல் இவர், பொருளாலும், தேகத்தாலும், உழைப்பு எடுத்துக்கொண்டு, சம்பாரித்த நிலங்களைப்போலவும், கட்டிவைத்த சபையைப்போலவும், வள்ளலார் திருக்குறிப்பின் படி கட்டியிருக்கும் சபையை, அந்தக்குறிப்புக்குவிரோதமாக தேவஸ்தானமாக்குவதற்கு, தன் இஷ்டப்படி புதுக்குவதும், சுத்தசன்மார்க்கமரபுக்கு விரோதமாக ஞானசபையில் விக்கிரகங்களை வைப்பதும், பிள்ளையார்கோயில் கட்டுகிறதும், சுப்பிரமணியர் கோயில் கட்டுகிறதும், பெருமாள் கோயில் கட்டுகிறதும்; குளங்கள் வெட்டுகிறதும், கிணறுகள் வெட்டுகிறதும், இன்னம் பற்பல திருப்பணிகள் செய்யப்போகிறதாக இவர் பிரசித்தஞ் செய்திருப்பதைப் பார்த்தால், இவருக்கு இருக்கிற சுதந்தரம் மற்ற அபிமானிகளுக்கில்லை போலும், இவர் அந்த வள்ளலாருக்கு முறைப் பிள்ளையாயிருப்பரோ, அப்படியிருந்தால் தகப்பன் குறிப்பின்படி பிள்ளையிருக்கவேண்டுமே, அப்படியில்லாதபோது இவர் அந்த தகப்பன் இடத்திற்கு அருகராவரோ, ஆகார். பொருள்சம்பாரிக்க வேடந்தரித்த இவர், அந்த இடத்தில், அந்த வேடத்தைக்காட்டி

பொருள்சம்பாதிக்கவேண்டுமோ, அதைவிட்டு அந்தமார்க்கத்திற்குறிய அனேகர் அபிமானித்திருக்குமிடத்தில், இவர் வேடத்தைப்பூட்டி, ஜாலங்காட்டுவதென்னே. எப்போ இவர் பிராயச்சித்தஞ் செய்துக்கொண்டு அந்தமரபுக்கு விரோதமான வேடத்தைத்தரித்தாரோ, அப்போதே, அந்த மரபுக்கு நாம் எவ்வளவும் பாத்திரன் அல்லவென்று ஒதுங்குவதே இவருக்கு நன்மையாம் இல்லாவிட்டால் ஐயோ இவர் அவமதிக்கப்படுவர்.

நேயர்களே முன்னே இவர் வந்தகாலத்திலிருந்த உண்மையான நிலையைச்சொன்னோம், பின்பு இவர் மாறுபட்டு வள்ளலார் திருக்குறிப்பிற்கு நேர்விரோதமாகச்செய்யும் காரியங்களைச்சொன்னோம். இப்போது இவர் விஜய வருஷம் ஆனி மாதம் 22-தேதியில் பிரசித்தஞ்செய்திருக்கும் விளம்பரத்தின் ஒவ்வொரு பிரகரணத்தின் உண்மை யெப்படிப்பட்டதென்று விஜாரிப்போம்.

இவருடைய விளம்பரம் முதற்பிரகரணத்தில், ஷடாந்த சமரச சுத்தசன்மார்க்க சத்திய ஞானசபை தேவஸ்தான தருமஸ்தானங்களின் டிரஸ்டியென்றார். இவருடைய போலி டிரஸ்டிபட்டத்தைக்குறித்துப் பின்னால்பேசுவோம்.

திருவருட்பிரகாசவள்ளலார் சமரசசுத்தசன்மார்க்க சத்திய ஞானசபையென்று வழங்கல்வேண்டுமென்று திருக்கரத்தால் எழுதிக்கொடுத்திருக்க, இவர் குருக்கள் பட்டத்தை மாற்றி சிவாசாரியார்பட்டம் பெற்றுக்கொண்டதுபோல், சத்தியஞான சபையையும் தருமச்சாலையையும் தேவஸ்தான தருமஸ்தானமென்று புரட்டியதென்னே. ஞானசபை தேவஸ்தானமென்றிருப்பதால், ஞானசபைவேறு, தேவஸ்தானம் வேறு? அப்படியானால் ஞானசபையென்பது எங்குளது? தேவஸ்தானமென்பது எங்கிருப்பது? இரண்டும் ஒன்றெனில் ஞானசபைதேவஸ்தானமாகுமா, பஞ்சபாண்டவர்கள் மந்தம்

காலைப்போல மூவரென்று இருவிரலைச்சுட்டி காட்டியதுபோல், பரிகாசத்துக்கு இடந்தருமே, ஆகிலும் ஞானசபையென்பது ஒன்று அங்குளதென்று யாவருக்குந்தெரிந்த விஷயமே. அப்படிப்பட்ட ஞானசபையை இவர் தேவஸ்தானமாக்குவதற்கு எண்ணங்கொண்டது வள்ளலார் கட்டளைக்கு முற்றும் விரோதமே.

இவருடைய விளம்பரம் இரண்டாவது பிரகரணத்தில் ஞானானந்தவல்லிசமேத ஆனந்த நடராஜப்பெருமானும், தனிப்பெருங்கருணை நாயகிசமேத அருட்பெருஞ் சோதீஸ்வரரும், வெள்ளியம்பலநாதர் பொன்னம்பலநாதரும், எழுந்தருளியிருக்கும் தேவஸ்தானமாகிய மேற்படி சத்தியஞான சபைக்கும் என்றார்.

இவர் பெயரைப்புரட்டிய தேவஸ்தானத்தில் எத்தனை நாதர் எழுந்தருளியிருக்கின்றார்கள். ஞானானந்தவல்லிசமேத ஆனந்த நடராஜப்பெருமான், ஒன்று. தனிப்பெருங்கருணை நாயகிசமேத அருட்பெருஞ்சோதீஸ்வரர், ஒன்று. பொன்னம்பலநாதர், ஒன்று. வெள்ளியம்பலநாதர், ஒன்று. இந்த நால்வரும் சபையில் எழுந்தருளியிருப்பது உண்மையா. உண்மையென்றால் இந்த நால்வரும் ஒன்றா? அல்லது வெவ்வேறு சுவாமிகளா? இவர்களை யாவரால் ஸ்தாபிக்கப்பட்டது? அருட்பெருஞ்சோதீஸ்வரர் என்பதில் சோதி வடிவத்துக்கு மேல் ஈஸ்வரசொரூபம் ஒன்று உளதென்று காண்கிறது இந்த நவீனவார்த்தைக்கு இந்த போலி சிவாசாரியரே சமாதானஞ் சொல்லி எல்லோருக்கும் திர்ப்திசெய்வாராக.

இவருடைய விளம்பரம் 3-வது பிரகரணத்தில் "திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்க பிள்ளை அவர்களால் வேட்டவலம் அருணாசல வசந்த கிருஷ்ணவாணாதராய அப்பாசாமி பண்டாரியாரிடம், தரும பரிபாலனத்தைச்சென்ற ஸ்ரீமுக வருஷம் ஒப்பிவைக்கப்பட்டு அவர் உயிலின்படிக்கு அவருடைய சுவிகிருதரான ம-ா-ா-ஸ்ரீ, அ. வ. கி. வாணாதராய சக்கிரய்யா பண்டாரியார் மேற்படி க்ஷேத்திரத்தின் தருமபரிபாலனத்தை நிருவகித்து வந்து, விரோதி வருஷம் ஆவணி மாதம் முதல் டிரஸ்டி பட்டத்தை பத்திரமூலமாகத்தனக்கு ஒப்பித்து, அவ்வருஷமுதல் மேற்படி க்ஷேத்திரத்தில் தேவஸ்தான தருமஸ்தான பரிபாலனத்துவம் தன்னால் நிருவகித்து வருவதாகச்சொல்லுகிறார். இது அற்புதத்திலும் அற்புதம். வள்ளலார் திருக்காப்பிட்டுக் கொள்ளு முன்னரே வள்ளலார் கட்டளையின்படி இவர் அந்த இடத்தை விட்டு ஓடிப்போயினரே, அப்படியிருக்க ஜமீன்தாரருக்கு தருமபரிபாலனத்தை ஒப்பிக்கப்பட்டதை வள்ளலாரை இடைவிடாமல் சூழ்ந்துக்கொண்டிருந்த காரியஸ்தர்களுக்குத்தெரியாமல், ஓடிப்போயிருந்த இவருக்குமாத்திரம் தெரிந்தது எப்படி.

நேயர்களே கேளுங்கள் வள்ளலார் திருக்காப்பிட்டுக் கொள்ளும் 10-தினத்திற்குமுன், மேற்படி ஜமீன்தாரரை வரவழைத்து, ஆண்டவர் தன்னை கொஞ்சதினம் மறைத்துவைக்கப்போகிறதாயும் அப்போது இவ்விடம் ஆதரவற்றிருக்கும் சில ஏழைகளை சிலநாள் கைவிடாமல் பாதுகாத்துககொண்டுவந்தால், ஆண்டவர் உனக்கு ஒன்றும் குறவுவைக்கமாட்டார் என்றார்கள். வள்ளலார் திருக்காப்பிட்டுக் கொண்டபின் 15 நாள்வரையில், வள்ளலார் உத்திரவின்படியே, சில ஏழைகளைகாப்பாற்றிக் கொண்டுவந்தார். இந்த புண்ணிய புருஷருடைய துர்ப்போதனையால் முற்றும் அவர்களை கைவிட்டு, இவருடைய ஜாலவலையில் அகப்பட்டுக்கொண்டார். இந்த ஜமீன்தார் கைவிட்ட ஏழைகளின் பரிதாபத்தை அங்கு அத்

தருணமிருந்த சிலகாரியஸ்தர்கள், அவரவர்களால் கூடிய வலாயில் கையொப்பம் இட்டுக்கொண்டு, இரண்டு வருஷ காலம் அந்த ஏழைகளை காப்பாற்றிக்கொண்டு வந்தார்கள். இது யாவருக்குந்தெரிந்தவிஷயமே சில ஏழைகளை கைவிடாமல் கொஞ்சகாலம் காப்பாற்றிக்கொண்டு வாவென்று சொன்னார்களேயல்லது, தேவஸ்தான தருமஸ்தான பரிபாலனத்துவத்தை ஒப்பித்தாரென்று இவர் கற்பித்துச்சொல்வது பொய்யே. மேலும் வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொண்டபின் சுமார் 10-வருஷம்வரையில், மேற்படி இடத்தைச்சேர்ந்த அபிமானிகளும், மேற்படி ஜமீன்தாரரும் கூடி, அனேகதடவை சபைமுதலான இடங்களைப்பற்றி நடவடிக்கை நடத்தியிருக்கிறார்கள், எந்த கூட்டத்திலாவது அந்த ஜமீன்தார் தருமபரிபாலனத்துவம் உடையவரென்று எந்த ரிகார்ட்டிலாவது ஏற்பட்டிருக்க வேண்டுமே, இல்லை. வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொண்ட 7-வது வருஷத்தில் இராஜாங்கத்தார், போர்த்திபட்டாசெய்ய ஆரம்பித்தபோது, சாலை சம்பந்தமுடையவர்களை விசாரிக்க, உத்தியோகஸ்தர்கள் ஆறுமுக முதலியார், நயினு ரெட்டியார், வெங்கடேசய்யர், சபாபதி குருக்கள் இந்த நால்வரையும் குறிப்பிட்டார்கள். இந்த நால்வரையும் ஏஜண்டுகளாக்கி பட்டா மாற்றல்செய்ய 1880-ளு அக்டோபர் மாதம் டிஸ்ட்ரிக்ட் கெஜட்டில் பிரசுரஞ்செய்தார்கள். அதை இந்த நால்வரும் கேழ்விப்பட்டு தங்கள்பேரில் பட்டா இருக்கப்படாது தருமச்சாலையின்பேரில் இருக்கவேண்டுமென்று விண்ணப்பித்தார்கள், அதை இராஜாங்கத்தார் கவனிக்காமலே மேற்படி நால்வரை ஏஜண்டுகளாக்கி பட்டாசெய்துவிட்டார்கள், மூன்று வருஷம் இந்நால்வரும் கூடி தங்கள் தங்களுக்கு இயன்ற மட்டும் நிலத்தீர்வையை, மேற்படி ஜமீன்தாரிடத்திலும், மற்ற சில அபிமானிகளிடத்திலும், கெஞ்சித்து உதவியைப்பெற்று தீர்வை செலுத்திக்கொண்டு வந்தார்கள். 1883-ளு மேற்சொன்ன நான்கு ஏஜண்டுகளும் மேற்படி ஜமீன்தாரவை தரும

கர்த்தாவாக நேமகஞ்செய்து பட்டா அவர்பேரில் செய்துக் கொள்ளும்படியாகவும், தீர்வைமுழுதும் செலுத்திக்கொண்டு வரும்படியாகவும் கேட்டுக்கொண்டு, அவர் சம்மதியின்பேரில் தருமகர்த்தாவாக இன்னவனை நேமகஞ் செய்திருக்கிறோம், அவர்பேரில் பட்டாசெய்யும்படி, இந்த நால்வரும் செய்த விண்ணப்பத்தை, கோர்ட்டிலும் கெஜட்டிலும் பார்க்கலாம். இந்த தருமகர்த்தாபட்டமும் இந்த நால்வரால் கொடுக்கப் பட்டதேயல்லது, மற்ற அபிமானிகளுக்குத்தெரியாது. இந்த ஜமீன்தார்பேரில் பட்டா ஆனவுடனே இவர் காலமாய்விட்டார். இப்போதிருக்கும் அ. வ. கி. வாணுதராய சக்கிரய்யா பண்டாரியினபேரில் போத்திபட்டாசெய்ய கெஜட்டில் பிரசித்தஞ் செய்தார்கள், இந்த ஜமீன்தார் இந்த குருக்களுடைய சொல் வண்ணம் நடக்கத்தக்கவராக இருந்தபடியால், மேற்படி ஜமீன் தார்பேரில் பட்டாசெய்யப்படாது வேறொருவனை நேமகஞ் செய்கிறோம், அவர்பேரில் பட்டாசெய்யவேண்டுமென்று ஜமா பந்திகாலத்தில் ஆக்ஷேபித்தார்கள், அப்படியே ஏற்படுத்திக் கொண்டுவரும்படி உத்தரவுசெய்து அந்த வருஷம் பட்டா செய்வதை நிறுத்தி மறுவருஷம் வேறொருவனை நேமகஞ்செய்துக் கொண்டுபோகுமுன்னமே இந்த ஜமீன்தார்பேரில் பட்டா செய்துவிட்டார்கள். இந்த ஜமீன்தாரருக்கு பட்டாமாற்றுதலை மாத்திரம் செய்ய இராஜாங்கத்தாருக்குச் சுதந்தரமேயல்லது தருமகர்த்தா பட்டத்தைமாற்றுவதற்கு அவர்களுக்கு யாதொரு சுதந்தரமுமில்லை இது அந்த மடத்தைச்சேர்ந்த அபிமானி களால் ஏர்ப்படுத்தவேண்டிய கடமை அப்படியிருக்க யாரால் இவருக்கு தருமகர்த்தாபட்டம் வந்திருக்கலாம். கிரமமாக ஏர்ப்பட்ட தருமகர்த்தர்களுக்கே, தங்கள் சுதந்தரமாக டிரஸ் டியை ஏர்ப்படுத்திக்கொள்ள அதிகாரமில்லாதிருக்கும்போது, இன்னவிதமாக தருமகர்த்தாபட்டம் தனக்குவந்ததென்று தெரிந் துக்கொள்ளாமல், இந்த ஜமீன்தார்தான் இவருக்கு டிரஸ்டி பட்டம் எப்படிகொடுப்பார். இவர் டிரஸ்டிபட்டம் கட்டிக்

கொண்டது எப்படியென்றல், இந்த ஜமீன்தாரருக்கு மேற்படி குருக்கள்பேரில் இருந்த ஏதோ சிலமனஸ்தாபத்தால், தன் பேரிலிருக்கும் சாஸனபட்டா நிலத்தை சிலகாரியஸ்தர்களின் பேரில் மாற்றியிட எத்தனித்தார். அதை யாரும் கவனிக்கவில்லை, அதன்பேரில் இராஜிநாமா கொடுத்துவிடுவதாகச் சொல்லி அனுப்பினார், அத்தருணம் இந்த குருக்கள் வேட்டவலம்போய் நானாவிதகதைகளால் அவரை மயக்கி, அவருக்கு தருமகர்த்தத்துவம் இருப்பதாகக்காட்டி, டிரஸ்டி அதிகாரம் தனக்குக்கொடுத்தால் சாலைவிஷயத்தில் தங்களுக்கு ஒருவித தொந்தரவுமில்லாமல் தீர்வைமுதலானதும் நானே செலுத்திக்கொண்டு வருகிறேன் பட்டாமாத்திரம் தங்கள்பேரில் இருக்கட்டுமென்று சொன்னார், இதை அவர் ஒப்பிக்கொண்டார். உடனே முத்திராயடிசம்வாங்கி மஞ்சகுப்பத்தில் சிலரைக்கொண்டு தனக்குவேண்டிய அங்கங்களெல்லாம் அதில் எழுதி, மேற்படி ஜமீன்தாரிடத்தில் கையெழுத்துவாங்கி ரிஜிஸ்டர் செய்துக்கொண்டார். அந்தவருஷம் தீர்வை செலுத்தும்படி மேற்படி ஜமீன்தார் இவரை நிர்ப்பந்தஞ்செய்ய, மறுபடியும் அவரிடம்போய் மயக்கி, தீர்வையை அவரையே செலுத்தும்படி செய்தார், இவர் ரிஜிஸ்டர் செய்துக்கொண்டு வந்தவுடன் மீசையுள்ள ஆண்பிள்ளைகளாக இருந்தால் வாருங்கள் நான் போலி டிரஸ்டிபட்டம் கட்டிக்கொண்டேன் என்று சிலபராக்கிரமங்களைக்காண்பித்து நவ நவ விதமான ஏற்பாடுகளைசெய்ய ஆரம்பித்தார், பின்பு சில அபிமானிகள் இதைக்கேழ்விப்பட்டு மேற்படி ஜமீன்தாரிடம்போய், உங்களுக்கு தருமகர்த்தத்துவம் இல்லாதிருக்க, அவருக்கு நீங்கள் டிரஸ்டி பட்டம் எப்படி கொடுத்தீர்களென்று கேட்க, என்னை மயக்கி கையெழுத்து வாங்கிக்கொண்டுபோய்விட்டார், மயக்குந்தன்மையில் ஆயிரம் தாசியானாலும் அவருக்கு ஒப்பாக மாட்டார்களென்றார். இதைப்பற்றி நாங்கள் உங்களையும் கோர்ட்டுமூலமாக வரவழைப்போமென்று சொன்னதற்கு, நான்கொடுத்த அதிகா

ரத்தை வாங்கிக்கொள்ளுகிறேனென்று சொன்னவர் இன்னம் இவர் மயக்கத்திலேயே அழுந்தியிருக்கிறார்.

இப்போது சொல்லிக்கொண்டுவந்த சரித்திரத்தால் அருணாசலவசந்த கிருஷ்ணவாணாதராய அப்பாசாமி பண்டாரியாரிடம் தருமபரிபாலனத்தை ஒப்பிக்கப்பட்டதென்று இவர் சொல்லப்புகுந்தது உண்மையா யோசியுங்கள். சில ஏழைகளை கைவிடாமல் சிலகாலம் பாதுகாத்துக்கொண்டு வரும்படி வள்ளலார் சொன்னவாக்கியத்தை 15-தினத்திற்குள்ளேயே அந்த ஏழைகளையும் கைவிட்டசங்கதி முன்னமே சொல்லியிருக்கின்றது. சில ஏழைகளை காப்பாற்றெனறு சொன்னசொல்லை, இந்த க்ஷேத்திரத்தின தருமபரிபாலனத்தை ஒப்பிக்கப்பட்டதென்று இவர் கற்பித்துச்சொல்வது என்னே, அல்லது இப்போதிருக்கும் ஜமீன்தார் கடந்தசித்திரை பானு வருஷம் முதல் விரோதி வருஷம் வரையில் இந்த க்ஷேத்திர தருமபரிபாலனத்தை நிருவகித்து வந்ததாகச்சொல்லுகிறார் இவர் தருமபரிபாலனஞ்செய்ததென்னை சத்திய தருமச்சாலையில் அனேக வருஷங்களாக வள்ளலாருடைய முக்கிய குறிப்பின்படி அபிமானிகளில் சிலர் அந்த தருமபரிபாலனத்தை வழுவில்லாமல் நடத்திக்கொண்டுவர ஜமீன்தாரிடம் டிரஸ்டி பட்டம் பெற்றுக் கொண்ட இவரும் விரோதி வருஷம் ஆனிமாதம் முதல் தருமஸ்தான பரிபாலனத்துவம் தன்னால் நிருவகித்து வருவதாக இவருடைய விளம்பரத்தில் பொய்சொல்லப்புகுந்தது, என்னை இவர் அந்த தருமஸ்தானத்தை எட்டிப்பார்த்து 10-வருஷமாகின்றதே எந்த இடத்தில் இவர் தருமபரிபாலனத்தை நடத்தினார் கேளுங்கள் நேயர்களே அப்போது இவர் சொல்லப் புகுந்தபொய் வெளியாகும். மேற்சொல்லிவந்த சரித்திரத்தால் மேற்படி ஜமீன்தாரருக்கே தர்மகர்தத்துவம் இல்லாதிருக்க இவர் டிரஸ்டி பட்டம் கட்டிக்கொண்டதாகக் குலாவுவது வேடமே.

இவருடைய விளம்பரம் 4-வது பிரகரணத்தில் "சத்திய ஞானசபைகருக்கடந்த பிரஜோத்பத்தி வருஷம் தைமாதம் 13-தேதி திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்க பிள்ளை அவர்கள் தோன்றுந்துணையாகி இருந்து நேரில் குறிப்பித்தவண்ணம் என்றலே ஞானக்கிரியாவதிரூப மாக ஸ்தூலலிங்கபிரதிஷ்டை என்னும் ஸதாபிவைக்கப்பட்ட தென்றார்

ஞானக்கிரியையென்பது என்னை ஸ்தூலலிங்கபிரதிஷ்டை யென்பது என்னை ஸ்தாபியென்பது என்னை ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லை. சபைகட்டும்போது ஸ்தாபிவைக்கப்பட்டதை ஸ்தூல லிங்கபிரதிஷ்டை யென்றார் பொருளாலும் தேகத் தாலும் உழைசதுக்கொண்டிருந்த காரியஸ்தர்களைவிட்டு இவர் ஒருவகையாலும் அந்த சமுகத்திற்கு குறியில்லாமலிருந்த இவ ருக்கு சபை கட்டடத்திற்கு ஸ்தாபிவைக்கும்படி சொன்னது பெருமைதான் ஆனல் பிரஜோத்பத்தி வருஷம் சொன்னதை இவர் விஜய வருஷம் வெளியிட்ட விளம்பரத்தில் குறிப்பிட்ட காரணம் தெரியவில்லை பெருமைக்கே.

இவருடைய விளம்பரம் 5-வது பிரகரணத்தில் 650 ரூபா சந்தாபட்டிமூலமாகத் தொகைசேர்த்து சபைக்கு இருபுறத்தி லும் நந்தவனங்கள் ஸ்தாபித்ததாயும் பொன்னு ஞானம்பாள் விசேஷதன உதவியால் கெண்டாமணியொன்று கட்டினதாயும் ஆனந்த நடராஜப்பெருமான்முன் பொன்மைகலவை நிற முள்ள ப்ரசின்னபடங்கள் அமைத்ததாயும் பெரும்புகழைக் காட்டவந்தார். பொன்னு ஞானம்பாள் விசேஷ தன உதவி யால் கெண்டாமணியொன்று கட்டினதாகச்சொல்லவந்த இவர் கெண்டாமணிக்காக புதுப்பேட்டை கிராமவாசிகளால் ஐய ஞர் விக்கிரகமாகிய தாம்பிரத்தைக் கொடுத்தார்களே அவர் கள் பெயரை ஏன் குறிக்காமல் விட்டார். மேற்படி சொன்ன

நந்தவனங்களில் புஷ்பத்தையெடுத்து எந்தசாமிக்கு சாத்தப் போகிறார். கெண்டாமணி என்னத்திற்கு, பரசின்ன படங்கள் என்னத்திற்கு. ஆன்மலாபத்திற்குறிய சமரசசுத்தசன்மார்க்க சாதனம் இன்னதென்று தெரிந்துக்கொள்ளாத இவர் 650 ரூபா செலவுசெய்தது வீணே.

இரருடைய 6-வது பிரகரணத்தில் M. A. B L. S, இராமசாமி முதலியார் பத்தினி மரகதவல்லி அம்மாள் அவர்களால் மேற்படிசபையில் சுவாமிக்கு நித்தியம் உச்சிக்காலகட்டளை மஹாநிவேத்தியமும் நடத்திவைக்கப்பட்டு வருகிறதென்றார். சபையிலிருக்கும் எந்தசாமிக்கு இவர் உச்சிக்கால கட்டளை நடத்துகிறார்.

இவருடைய விளம்பரம் 8, 9-வது பிரகரணத்தில் இறுக்கம் இரத்தின முதலியார் குமாரர் இ. கணபதி சண்முக முதலியார் இவ்விருவர்களால் உயில் மூலமாய் ரூபா 1000. இந்தசபையில் ஆருதனைசெய்யப்பட்ட சிவாசாரியார் அவர்களுக்கு ஆத்மார்த்த பூசை நைவேத்தியங்களுக்குச் சர்வசுதந்தரமாய் கொடுக்கப்பட்டதாயும், மேலும் கூடலூர் தாலூக்கா மேலப்புதுப்பேட்டை ஏரப்பிள்ளையால் நன்செய் புன்செய் சுமார் 8½-காணி நிலம் எனக்குத்தானஞ் செய்யப்பட்டதென்றார்.

இவர் சபையில் கொண்டாடும் சாமியைவிட இவர் மேல் தான். இவருடைய ஆத்மார்த்த பூசைநைவேத்தியங்களுக்குக் கிடைத்தபொருள் சபையில் இவர் கொண்டாடும் சுவாமிக்குக் கிடைக்கவில்லை. சிறுந்தொகையெல்லாம் சுவாமிக்கும், பெருந்தொகையெல்லாம் இவருடைய ஆத்மலிங்கத்திற்கும் செய்துக் கொண்டார், இவருடைய புண்ணியமே புண்ணியம். இப்படிப்பட்ட பெருந்தொகையை அவர்கள் இவருடைய ஆத்மார்த்த பூசைக்கு எழுதிவைத்தது வியப்பே, மேலும் இவ்

விருவர்களும் பாலியர்கள் இனி புத்திரசந்தானத்ப ற பெறத் தக்கவர்கள் நிர்ஹேதுவாக அவர்கள் இப்படிப்பட்ட உயில் செய்வதற்குக்காரணம் என்னே எந்தகாலத்தில் இந்த உயில் பிறந்ததாக இருக்கலாம். நேயர்களே நாம் ஒவ்வொருவரும் இதன் உண்மையை உற்றுயோசிக்கலாம்.

இ. இரத்தின முதலியார் என்பவர், வள்ளலாரிடத்தில் மிகவும் அன்புடையவர், இவரும் இவருடைய மனைவியாரும் சாலையிலிருந்தே காலமாய்விட்டார்கள். மேற்சொன்னவருடைய பிள்ளைகள் கணபதியும், சண்முகமும் பாலியர்களாக விருந்தபடியால் இந்த இரண்டுபிள்ளைகளும் பாட்டியாருடைய சவரட்சணையி லிருந்தார்கள், அம்மாளும் காலமாய்விட்ட பின், இவ்விருவரும் கையல்பொங்கி சாப்பிட்டுக்கொண்டிருந் தார்கள், மூத்தவன் கணபதியென்பவனுக்கு சுமார் 20 வயதிருக்கலாம், இந்த பிள்ளையோ அடுத்தடுத்துவரும் காக்கைவலியினால் புத்தி சுவாதீனமில்லாமல் வெறியனைப்போலிருந்தான், இது யாவருக்குந் தெரிந்தவிஷயமே. இளையவன் சண்முகம் என்பவனுக்கு சுமார் 18 வயதிருக்கலாம், இந்த இளையவன் பொங்கி மூத்தவனையும் சவரட்சணை செய்துக்கொண்டுவந்த கஷ்டத்தினால், தான் கல்யாணஞ்செய்துக்கொள்ள எத்தனித்து சென்னப்பட்டணத்திலிருந்த தன் சொந்தவீட்டை 1,500 ரூபாயிக்கி விர்ப்பனைசெய்து, இவருடைய விளம்பரம் 16-வது பிரகரணத்திற் சொல்லியபடி 150 ரூபா பூசக்கட்டளைக்குவைத்து, 350 ரூபா கல்யாணச்செலவுக்கு எடுத்துக் கொண்டு 1,000 ரூபா கல்லக்குறிச்சியில் தங்கள் போஷனைநிமித்தம் இந்தகுருக்கள் மூலமாகவே நெல்லு வட்டிக்கிக்கொடுத்து, மேற்கண்ட சிறுவர் இருவர்பேரிலும் பத்திரம் எழுதிவாங்கிக் கொண்டு ரிஜிஸ்டர் செய்துக்கொண்டார்கள், இந்த சண்முகம் என்கிற இளையபிள்ளைக்கு, இந்த குருக்களே முன்னின்று பெண் பேசி, திருவொற்றியூரில் கல்யாணஞ்செய்வதாய் எர்ப்

பாடுசெய்து, கல்யாணத்திற்கு வைத்த 350 ரூபாயிக்கு இந்த குருக்களே சாமான்களெல்லாம் வாங்கி, திருவொற்றியூருக்கு அனுப்பினார். விவாகஞ்செய்துக்கொள்ளப்போகிற இந்த சிறுவன் உடனே பட்டணத்திலிருந்து பார்வதிபுரத்திற்குவந்து சாலையிலுள்ளவர்களுக்கு தாமபூலம்வைப்பதற்கு சாமான்களை வாங்கிக்கொண்டு வந்தான், அன்றயதினமே வாந்திபேதிகண்டு மரண அவஸ்தையினால் பிரஞ்ஞையில்லாமல் மறுதினமே இறந்தான். மூத்தவனோ எதைக்கொண்டும்போய் கொடுத்த போதிலும் கையெழுத்து போடத்தக்கவன் அப்படிப்பட்ட புத்திசுவாதீனமில்லாதவனென்றும் யாவருக்கும் தெரிந்த விஷயமே. இந்தபிள்ளையும் மேற்படி பிள்ளையவன் இறந்த இரண்டாவது மாதமே மேற்படி வலியினால துன்பப்பட்டு இறந்தான். அப்படியிருக்க எந்தகாலத்தில் உயிலின்மூலமாய் இவருக்குசர்வ சுதந்தரமாகக்கொடுத்திருக்கலாம் ஒவ்வொருவரும் இந்த அதிசயமான சங்கதியை கவனியுங்கள். இதன்றி கல்யாணசெலவு வாங்கிய 350 ரூபாயும் எஙகேபோயின இதன் நியாயம் இராஜாங்கத்தார் முன்னிலையில் வெளிப்படும்போது இதன் உண்மையை தெரிந்துக்கொள்ளலாம்.

இதன்றி மேற்கண்ட புதுப்பேட்டை எரப்பிள்ளையென்பவர் தனக்கு தேகஅசௌக்கியம்நேரிட்டபோது தேகநம்பிக்கையில்லாமல் சாலைக்குவந்து 8½ காணிநிலம் சபைக்குதானஞ்செய்வதாய் எத்தனித்தார். அத்தருணம் இவர் அதை தனக்கு தானஞ்செய்தால் சபை கட்டளைகளை தடையில்லாமல் நடப்பிப்பதாய் அசௌக்கியகாலத்தில் அவரை மயங்கச்செய்து எழுதி வாங்கிக்கொண்டதாக தெரியவருகின்றது இந்த எறப்பிள்ளையென்பவர் நெடுங்காலமாக சாலை அபிமானியாகஇருக்க யாதொருசும்பந்தமுமில்லமல் வழிப்போக்கராகிய இவருக்கு தானங்கொடுக்க ஒரு அவசியமும் தோற்றப்படவில்லை மோசக்கருத்தால் மயக்குந் தன்மையால் மயங்கினார்.

இவருடைய விளம்பரம் 10 வது பிரகரணத்தில் சொல்லிய கல்லக்குறிச்சி நாயனார் சுமார் 20-வருஷத்திற்கு முந்தியே சாலைக்கும சமைக்கும் நிலம் தானஞ்செய்திருக்க இவர் முன்னிலையில் செய்ததாய் குறிப்புக்காட்டவந்தது பொய்யே.

இவருடைய விளம்பரம் 13-வது பிரகரணம் சாலை ஏற்பட்ட பிரப-ளு முதல் நாளது பரியர்தும வருஷம் 28-க்கு சாலை நிலங்கட்கு அபிமானிகளால சந்தா வசூல்செய்து, 14 வருஷம்வரையில் தீர்வை செலுத்திக்கொண்டு வந்தார்கள், பதினன்கு வருஷத்திற்குமேல், முந்திய ஜமீன்தார்பேரில் பட்டாசெய்து தீர்வை செலுத்திக்கொண்டு வரும்படி சில காரியஸ்தர்கள் கேட்டுக்கொண்டபடி அவர் செலுத்திக்கொண்டு வந்து, அவர் உயிலின்படியே இப்போது ஜமீன்தார் தீர்வை செலுத்த உடன்பாடாகவிருக்க, இவர் தன் முன்னிலையில் மேற்படி ஜமீன்தார 1889-ளு ஆகஸ்டு மாதத்தில் தாம்பூல தக்ஷிணையோடு புரதிரி சகிதமிருந்து வாக்குத்தத்தஞ் செய்ததாய் இவர் சொல்லப்புகுந்தது பெருமையே.

இவருடைய விளம்பரம் 15-வது பிரகரணத்தில் சுந்திரம்மாள் உயிலின்படி சுமார் 9-ளு மாக தினஞ்சபையில் ஒரு தீபமும் புஷ்யதினத்தில் சிறிது அன்னவிநியோகமும் நடந்துவருகிறதென்றார்.

எல்லா உயில்களின் தொகையைக்காட்டி இந்த உயிலின் தொகையை மறைத்தார். என்னமோசக்கருத்தோ தெரியவில்லை, இந்தம்மாள் எங்கே அன்னவிநியோகஞ்செய்ய உயில் செய்தாள், இந்த 9-வருஷ காலமாக இவர் எந்தவிடத்தில் அன்னவிநியோகஞ்செய்தார், இந்த உண்மையை ஒவ்வொருவரும் கேட்டுத்தெரிந்துக்கொள்ளுங்கள். இதன்றி இந்தம்மாள் உயிர்விடுங்கால், இவருடைய வீட்டின் திண்ணையின் பேரில், ஒரு சிறியபெட்டியில், நகைகள், இரத்தினங்கள்,

ரொக்கங்கள், இதுமுதலியவும், பித்தளைசாமான்கள், பீரோ முதலியதும், சுமார் 1,000 ரூபா சொத்துவரையில், இருந்த னவே அதுகள் எங்கே அடங்கிற்று அதையும் விசாரியுங்கள்.

இவருடைய விளம்பரம் 13-வது பிரகரணத்தில் சுமார் 900 ரூபா வரையில் சபையில் திருப்பணி செய்திருப்பதாயும் தற்காலந் தோன்றாத்துணையாயும் சொற்பனதிகளில் தோன்றுந் துணையாயும் உள்ள திருவருட்பிரகாசவள்ளலார் அவர்களால் தெரிவித்துள்ள உபதேசகலைமரபான மந்திரங்களோடு வேதா கம விதிப்படி சத்திய சுபலமாய் சிவயாககிரிகைகள் ஆரம் பித்து கிரியாஞானவழியாய்த் தாத்வீகப் பிரதிஷ்டை சுமார் 1,000 ரூபா வரையில் செலவுசெய்து கும்பாபிஷேகஞ் செய் யப்பட்டிருக்குதென்றார்.

இப்போது உலகத்தில் வழங்கும் வேதாகமமுதலியவைக ளெல்லாம் நம்பாதீர்கள் என்று சொன்னவள்ளலார், வேதாகம விதிப்படி உபதேசகலைமரபான மந்திரங்களை, அந்த வள்ளலார் குறிப்புக்கு விரோதமில்லாமல் நடக்கும் இந்த பரமபுருஷ ருடைய சொர்ப்பனத்தில்வந்து சாதித்தார் சிவயாககிரியை யென்பது என்னே கிரியாஞானவழியாய்த் தாத்வீகப்பிரதிஷ்டை யென்பது என்னே; கும்பாபிஷேகம் எனனத்திற்குச்செய்தது, இதுகளெல்லாம் சமரசசுத்தசன்மார்க்கத்திற்குறிய ஞானக்கிரி யாமரபோ, இதுகளையெங்கேகற்றனரோ. இவர் சிலவருஷங் களுக்குமுன் ஆண்டவர் சொற்பனத்தில் வந்து சொன்னதாக, சில கட்டுக்கதைகளையெழுதி, இரண்டொருசாலை அபிமானிக ளுக்குத்தெரிவித்ததை, இதற்குப்பின்னிட்டு பிரசித்தஞ்செய்யப் போகிற, வடலூர் சரித்திரத்தில் பார்க்கலாம் அப்போது இவருடைய சொற்பனப்புளுவுகள் வெட்டவெளியாகும்.

இவர் விஜய-ஸு சபையில் கும்பாபிஷேகஞ் செய்யப் போகிறதாக, வேண்டியபொருளைப் பீராய்ந்து, பிராமணரும்

பல்கலைச் சேர்த்துக்கொண்டு, சபைக்குள் தென்னங்கீற்று கலைக்கட்டி, ஓமகுண்டலத்தைப்போட்டு, அனேக குடுவை களைவைத்து, ஒருகலசத்தைநாட்டி, இரவும்பகலும் ஓமத்தை வளர்த்தி, குடங்குடமாக நெய்யை ஊற்றி, ஒருகல்லைவைத்து ஆத்மலிங்கமென்று அபிஷேகஞ்செய்து, பின்பு அதை யெடுத் துக்கொண்டு, அந்தந்தத் தேவாலயங்களுக்கு ஓடி, மறுபடியும் அதைக்கொண்டுவந்து சபைக்குள்வைத்து, பிரதிதினமும் இர கசியமாக உள்ளே அபிஷேகஞ்செய்துக்கொண்டு வருகிறார். வெளியாருக்கு ஒன்றைக்காட்டி ஒன்றை முடித்தார்; இப்படிப் பட்ட சடங்குகள் வள்ளலார் எப்போதாவது இவருக்கு நடத் திக்காட்டியதுண்டோ. இவர் சிலகாலம் சுத்தசன்மார்க்கத்தை விளக்கவந்த வள்ளலிடத்தில் பழகியும், ஆத்மலிங்கம் இன்ன தென்று ஒன்றுந்தெரிந்துக்கொள்ளாமல், கல்லைக்கட்டிக் கொண்டு, 1,000 ரூபாயை வீணுகச்செலவு செய்ததைவிட, வள்ளலாாசொன்ன சன்மார்க்கத்திற்குறிய ஜீவகாருண்யத்தை நாடி, ஆத்மலிங்கங்களுக்கு அன்னவிநியோகஞ் செய்திருப் பாரேயானால், பொருள் கொடுத்தவர்களும் விசேஷபுண்ணி யத்தை யடைந்திருபபார்கள்.

இவருடைய 19-வது பிரகரணத்தில் "தேவஸ்தான தரு மஸ்தானங்களிலும் சத்தியஞான குருதேசிகன் திருமாளிகை உள்ள சித்திஸதானததிலும் இன்னும்பற்பல செய்காரிய திருப் பணிகளிருப்பதாகக் குறித்து சிற்சபாரகசியாங்கித பளிங்குத் திரையில் ஸ்வர்னவில்வமாலைசாத்துவித்தலென்றார்." ஸ்வர்ன வில்வமாலை சாத்துவதற்கு வள்ளலார் இதையும் இவருக்கு சொற்பனத்தில்வந்து சாதித்தாரோ; இது சமரசசுத்த சன் மார்க்கச்சின்னமோ.

மேலும் வள்ளலார் அநுமதிப்படி ச. ஆறுமுக முதலியா ரால் ஏர்ப்படுத்தியுள்ள பிளான் பிரகாரம் சத்தியதருமசிம்மா

சனத்தை சந்தனமரத்தாலும் யானைதந்தத்தாலும் செய்து தங்க முலாம்கலந்து பூர்த்திசெய்வித்து ஆராதனைக்கு அமைத்தல் வேண்டுமென்றார்.

சத்தியதருமசிம்மாசனம் இருக்குமிடத்தில், சூத்திரர்கள் தொழுகிறபடியால், அந்தவிடத்தில் தாங்கள் தொழுகிறதில்லையென்று, அதன்பேரில் குற்றம்கற்பித்து, அதைவிட்டு பிராமணர்கள் தொழுதற்கென்றே, ஒரு குட்டிசாலையையுண்டாக்கி, 10-வருஷகாலமாக அதை தொழுதுக்கொண்டுவருகிற இவர், அந்த சிம்மாசனத்தை கண்ணுற்கண்டு 10-வருஷமாகின்றதே, அப்படி வேறுபட்ட இவருக்கு மறுபடியும் மேற்படி தருமசிம்மாசனத்தில்பேரில், கருணைவந்தது என்னை, வள்ளலார் இவருக்கு சொற்பனத்தில்வந்து சொல்லி இருக்கலாம். ஆறுமுக முதலியார் பிளான்படி நடத்தவேண்டியதாக இருந்தால், அக்காலத்தில்தானே அனேககாரியங்கள் நடந்திருக்கும், சபைகட்டடம் முடிந்தவுடன், அந்த பிளான்படி, சிலவேலைகளைச்செய்ய ஆறுமுக முதலியார் பிரயத்தினப்பட்டபோது, இனி நீங்கள் எந்த வேலையிலும் பிரவேசிக்காதீர்கள், செத்தநாய்களைப்போலிருங்கள், ஆண்டவர் வருங்காலத்தில், இந்தமார்க்கத்திற்கு வேண்டிய அங்கங்களெல்லாம், இராஜாங்கத்தார் முன்னிலையில் முடியுமென்றார்கள், அப்படியிருக்க இப்படிப்பட்டகாரியத்தில் இவர் நுழைய எண்ணங்கொண்டது, பொருள்சம்பாதிக்கவோ, ஆனால் இது நல்லதருணந்தான்.

இதன்றி தருமஸ்தானத்தில் 'பிராமண சைவ வேளாளர் முதலானவர்களுக்கு சுயம்பாகம் செய்துக்கொள்ள கட்டடம் கட்டுவித்தலென்றார். இப்படிப்பட்டவர்களுக்கும் பிரத்தியேகமாய் ஒருகட்டடம் இருக்கவேண்டுமென்று வள்ளலாருக்கு அப்போதே தோற்றியிருக்குமேயானால் தருமச்சாலையைப்போல் வேறு ஒன்று கட்டியிருக்கலாம். அது சமரசசுத்தசன்

மார்க்கிகள் வாசஞ்செய்யும் இடமென்று இவர் தெரிந்துக் கொள்ளவில்லை.

இதன்றி சத்தியஞானசபையில் காலைமாலை பூசைநைவேத்தியங்களுக்கு சாஸ்விதமான ஸ்தாவரசங்கம ஸ்திதி சம்பாதித்து வைக்கவேண்டுமென்றார்.

ஆனால் வள்ளலார் சித்தத்திருக்கோலத்துடன் வெளிப்பட்டு சுத்தசன்மார்க்கத்தை விளக்கஞ்செய்யப்போகிறதாகச் சொன்னவாக்கியத்தில் இவருக்கு அவலமே. இல்லாவிட்டால் சாஸ்விதமான ஸ்திதி என்னத்திற்கு. வள்ளலாருடைய விவகார காலத்தில், சூழ்ந்திருந்த அனேக காரியஸ்தர்கள், தரும கைங்கரியங்கள் தடைபடாமல் நடந்துவரும்பொருட்டு, பூஸ்திதிகளையும், ரொக்கங்களையும், வைப்பதாய் சொன்னபோது, அந்த பொறுப்பு உங்களுக்கு வேண்டாம், அது கடவுளுடைய பொறுப்பு, ஞானசித்தன் வெளிப்படுமுன் நீங்கள் நீங்கள் பக்குவப்பட்டு பேரின்பலாபத்தை அடையும்படியான முயற்சியை எடுத்துக்கொள்ளுங்க ளென்றார்கள், இதை இவர் கேட்டதில்லை.

இதன்றி ஆறுதிக்கும் சிவாசாரியர்களுக்குக் கிரகம் கட்டுவித்தலோடு சாதக உபசாதக ஆசாரியர்களும் பரிசாரகர் உபசாரகர் முதலிய கைங்கரிய பரர்களும் இந்த க்ஷேத்திரத்திலேயே வசிப்பதற்கு உறைவிடம் உபசீவன முதலியன ஏற்படுத்தல் என்றும் பலகாரியங்கள் இருக்கின்றனவென்றார். மேற்படியாருக்கு உறைவிடம் உபசீவனமுதலியவற்றிற்கு ஏற்படுத்த வள்ளலார் இவருக்கு சொர்ப்பனத்தில் வந்து சாதித்தாரோ. இப்போது ஆறுதிக்கும் சிவாசாரியருக்கு தாற்காலம் இருக்கும் கிரகம்போதாதோ, மெத்தைவீடு கட்டிக்கொள்ளவேண்டுமோ, சாதக உபசாதக ஆசாரியர்கள் என்னத்திற்கு, பரிசாரகர் உபசாரகர்முதலிய கைங்கரியபரர்

கள் என்னத்திற்கு, இவருக்குத் தொண்டுசெய்யவோ. "உற்று கெட்டாலையிடு," என்று சொன்னவாக்கியம் இவருக்கேசரும். சிவாசாரியார்முதலிய பிராமணர்களுக்கு சாஸ்விதமாகவும், பாரம்பரியமாகவும் வாழ்வதற்கு உறைவிடம் உபசீவனமுதலிய தற்கும், ஏர்ப்பாடுசெய்யத்துணிந்தார், வள்ளலார் திருக்கோலத்துடன் வெளிப்படுவதை மறந்தார், காசுபரிக்கும் வேடத்தைப் பூண்டார், இவர் வேடத்தை அந்தவிடத்திலும் பூட்ட ஆரம்பித்தார்.

இவருடைய விளம்பரத்தின் கடைசியில் ஒரு முக்கியமான கவனிப்பென்றுமுக உரைக்கொடுத்து "இவ்வூரிலுமற்ற இடங்களிலுமுள்ள சிலபலஜனங்கள் திருச்சிராப்பள்ளி தஞ்சைமுதலான பற்பல இடங்களிற்சென்று தாங்கள் தாங்களும் பற்பல கைங்கரியங்கள் இந்த க்ஷேத்திரத்தில் செய்வதாக அபிநயஞ் செய்து உரையாடி யாசித்து அபகரித்துக் கொள்வதாய் பற்பலவழிகளால் கேழ்விபடுகிறதாயும் அப்படி அபகரித்துக்கொள்பவர்கள் பாவியாகாமல் கொடுப்போர் உத்தேசம் நிறைவேறுமல்திரவியம் வீணாவதை நிவர்த்திப்பதற்கும் தேவஸ்தான கைங்கரியங்களும் தருமஸ்தான புண்ணியத்திலும் சித்திஸ்தானத்தில் லட்சியமாயுள்ள அபிமானிகள் உபகரிக்குந்தொகையை தன்பேரால் மணிஆர்டர் செய்யவேண்டுமென்றார்."

பலஜனங்கள் உரையாடியாசித்து அபகரித்துக்கொள்வதாயும் தான் அப்படி பாவியாகாமல் புண்ணியதீர்த்தத்தில் நீராடும் இந்தபுண்ணியபுருஷர், சாலைக்கு வந்தகாலத்தில். உடுக்கவோ வொருகந்தைக்குமேலில்லை "என்றவாக்கியத்திற்கு, ஒப்பாக இருந்த இவர், ஒருவிதமான விவகாரங்களுமில்லாமல், சபையை முன்னிலையாகவைத்துக்கொண்டு, ஞாலங்காட்டி வயிர்வளப்பவருக்கு, இப்போது சுமார் 20,000 ரூபா ஸ்திதிக்கிஅதிகாரியாவதற்குக்காரணம்என்னை.

பற்பலகைங்கரியங்கள்செய்வதாய்,அபிநயஞ்செய்து உரை யாடியாசித்துஅபகரித்துக்கொள்வதாய், இவர் யாரைசுட்டிக்கா ட்டவந்தனரோ, அந்த தர்மலிங்கபிள்ளையென்பவர், 10-வருஷ காலமாக ஊருராகபேயைப்போலலைந்து, வள்ளலார் கருத்திற் கொத்த தருமபரிபாலனத்தைத்தருமச்சாலையில்,தடையில்லாமல் நடத்திக்கொண்டுவந்தார், வெவ்வொருவேளையில், தருமகைங் யரியம்தடைபடும்போது, தன்சொந்தநகைகளை அடமானம் வை த்தும், விர்ப்பனைசெய்தும், தருமகாரியத்தைத் தடையில்லாமல் நடத்துவார், அவர்காலமுடிவுவரையில் ஓட்டாண்டியாகவே இ ருந்து சென்ற தைமாதம் இறந்தார், இதுயாவருக்கும் தெரிந்த விஷயமே.

வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொண்டகாலமுதல், வள்ள லார் குறிப்பின்படி தருமச்சாலையில் தருமபரிபாலனத்தை, சி லகாலம் சிலசந்நியாசிகள்கூடி நடத்திக்கொண்டுவந்தார்கள் பின் புமேற்படி தர்மலிங்கபிள்ளையென்பவர். மேற்படி தருமபரிபால னத்தை கைக்கொண்டு சென்றஜய வருஷமார்கழிமீ வரையில் நடத் திக்கொண்டுவந்தார், அப்படியிருக்க இவருடையவிளம்பரம் மூ ன்றுவதுபிரிவில் தருமஸ்தானபரிபாலனத்துவம், என்னால்நிருவ கித்துவரப்படுகிறதென்றுசொல்லவந்தது, கொல்லன்வீதியில் ஊசி விர்ப்பனை செய்யவந்தவன்போலாம்- ஆனால் இவர் தருமஸ்தா னத்தில் தருமபரிபாலனஞ்செய்வதாய் வருஷாவருஷம் யாசிக்கி றரே, அதையென்னசெய்கிறார்; தைபூசகாலங்களில் புளியேப் பமிடும் பிராமணகும்பல்களைச் சேர்த்துக்கொண்டு தான் சபை யில் ஞாலங்காட்டவேடந்தரித்து செய்யுந்திருவிழாகாலபரியந்த ம், அவர்களால் வேதகோஷ்டஞ்செய்வித்து, அவர்களுக்குப்பி ரதிதினமுஞ்சித்திரா ன்னங்களாலும் அப்பவர்க்கங்க ளாலும் தொப்பைகளைநிரப்பி. சவாஸ் சவாஸ்குருக்கள் நல்லசெய்தாரெ ன்றுசொல்லும்படி,அவர்கள்தேகமுழுதும்வாசனைதிரவியங்களை அப்பி, இவருடைய திருவிழா முடிவுகாலத்தில் அவர்களுக்கு,உ

டுகளை, தட்சணை முதலியதும் கொடுத்தனுப்புவார் இதன்றி அந் தத்திருவிழாகாலத்தில், இவருக்குப்பொருள்கொடுக்கும் பெரும் புட்டத்தாருக்கும், இவருக்கு அந்தகாலத்தில் ஏவல்செய்யும் ஆட் களுக்கும், வயிற்றை நிரப்புவார் அக்காலத்தில், யாராவது ஏ ழைகள்போய்பசியினால் பல்லையிளித்து கத்துவார்களேயானால், அத்தருணம் இவருக்குப் பொருள்கொடுக்கும் பெரும்புட்டத்தா ர் யாராவது நேரிலிருந்தால், காருண்யம்ததும்பிவழிவதுபோல், இதோ சாப்பாடு போடுகிறேன் இருங்களென்று மெல்லநழுவிவி டுவார், யாரும் இல்லாவிட்டால் தடியெடுத்து அடிக்கவந்து, அ தோ தருமச்சாலையில் சாப்பாடுபோடுகிறார்கள், அங்கேபோங்க ளென்பார் இதுதான் இவர் வருஷாவருஷம் செய்யும் தருமபரி பாலனம்.

தருமஸ்தானத்தில் தருமபரிபாலனஞ்செய்வதாய் பிரதிவரு ஷமும் யாசிக்கிறோம், மேலும்பிரசித்தஞ்செய்கிற விளம்பரத்தி லும், தருமஸ்தானபரிபாலனத்துவம்என்றால் நிருவகித்துவரப்ப டுவதாய் நீட்டாகவெழுதுகிறோம்; இந்தஉண்மையை விசாரிபோ ர்க்கு கள்ளவேடமாகமுடியுமே இதற்குஎன்னசெய்யலாம் தரும ஸ்தானத்தையும் கைக்கொண்டால், ஊரையடித்துஉலையில்போ டலாம், என்று நெடுங்காலமாக, கள்ளக்கருத்தை வைத்துக்கொ ண்டு எலியைப்பிடிக்கும் பூனைபதுங்கியிருப்பது போலிரு ந்து, சென்ற ஜயவருஷம் மார்கழிமாதம் வரையில் தரும ச்சாலையை நடத்திவந்த தருமலிங்கபிள்ளையென் பவர், இறந்த இரண்டுமூன்று தினத்திற்குள் தருமலிங்கபிள்ளை யுடன் உடந்தையாகஇருந்து நடத்திக்கொண்டுவந்தவர்கள், தரு மகாரியத்தை தடையில்லாமல்நடத்திக்கொண்டுவர, சந்துவிட்ட து நான்வந்துவிட்டேனென்று, போலிடிரஸ்டிஅதிகாரத்துடன், தனக்கான சிலரை தன்பின்அழைத்துக்கொண்டு' சாலைக்குள்நு ழைந்து,பிரதிதினமும் தர்மகயிங்கரியங்கள் நடக்கும் சாமான்க ள்வைத்திருந்த அரைபூட்டிட் டிருந்ததை சீல்செய்து சாலை

யின்பேரிலும் சாலையைச்சேர்ந்த தோட்டத்தின்பேரிலும் தனக்கு போலிடிரஸ்டி அதிகாரம் இருப்பதாகக்காட்டி, சாலையையும்தோட்டத்தையும், இனிதன் அதிகாரத்தின்கீழ் நடத்தும்படியாக, சிலஏர்ப்பாடுகளைச் செய்துக்கொண்டு தன்னுடன்கூட அழைத்துக்கொண்டுபோனவர்களைக்கொண்டு அந்தஏர்ப்பாட்டில் கையெழுத்து வாங்கிவீணாக 20 ரூபாவயையில் செலவுசெய்து, டிஸ்ரிக்கட்டு கெஜட்டில் பிரசித்தஞ்செய்து பத்திரிகையும் வெளியிட்டார். வள்ளலார் குறிப்பின்படி சமரச சுத்த சன்மார்க்க மரபுக்குரிய ஜீவகாருண்யமென்கிற பரஉபகாரச்செய்கைகளை நாடி, மேல்கண்ட 20. ரூபாயை செலவுசெய்திருப்பாரேயானல், பெரும்பயனை அடைந்திருப்பார், இவர் என்னசெய்வார் பெருமைக்கு வேட்டையாடவந்தவர். இவர் சீல்செய்ததை தருமகயிங்கரியத்தை நடத்திக்கொண்டுவந்தவர்கள், அதை மேல்விசாரணை செய்துக்கொண்டிருந்த சிலஅபிமானிகளுக்குக் கடிதமூலமாக தெரிவிக்க அவர்கள் தைபூசத்துக்குமுன்வந்து, கூட்டங்கூடி, தைபூச சமாராதனைச் செய்ய வேண்டிய சாமான்களெல்லாம் சீலிட்டஅரையிலிருந்த படியால் சீல்செய்தவர்களை அழைப்பித்து சீலைஉடைக்கும்படி கேட்டு உடைக்காத தினல், சேர்ந்திருந்த கூட்டத்தார், சீலையுடைத்து, ஆண்டுக்கொண்டிருந்தவர்களுடைய சுவாதீனத்திலிருந்தசாவியைக்கொண்டு, பூட்டைதிரந்து, சமாராதனையை தடையில்லாமல்நடத்தினர்கள், இப்படிப்பட்ட புண்ணியபுருஷருடைய சரித்திரத்தை இன்னஞ்சொல்லப்புகின் விரியும் ஆதலால் இதைசுருக்கி இவர்மாறுபட்டு வள்ளலார் கொள்கைக்கு, இப்படிப்பட்ட விரோதமானகாரியங்கள்செய்ய, இவருக்குத்துணிவு வந்ததைக்கொஞ்சம் சொல்லுவோம்.

இந்தஉலகம் உய்யும்பொருட்டு குருமுகூர்த்தமாக வெழுந்தருளிவந்த, வள்ளலாரிடத்தில் இவர் வந்த முதற்காலத்தில், குலாசாரதர்மங்களையெல்லாம் விட்டு, ஜாதிசமயபேதம் தனக்கில்லை

யென்று, சமரச சன்மார்க்க நெறியில் நிற்கப்புகுந்த இவர், அந்தவள்ளல் திருக்காப்பிட்டுக்கொண்டபின் மாறுபட்டது என்னே, அந்ததிருவருள் வாக்கியத்தில் இவருக்கு அவலம்வந்து விட்டது. அதனால் பிராயச்சித்தம்செய்துகொண்டு பரமாசாரியர்பட்டத்தைபெற்றுக்கொண்டார்- இவருக்குஅவலமவந்தால் அந்த விடத்திலிருந்து அப்புரப்படுவதைவிட்டு, அந்தஇடத்திற்கு யாரும்திக்கில்லாததைப்போலவும்தான் கஷ்டப்பட்டுசம்பாரித்த சொந்தநிலங்களைப்போலவும்தான் பொருள்செலவுசெய்து கட்டிவைத்த சபையைப்போலவும் பொருளாலும் தேகத்தாலும் உழைப்புஎடுத்துக்கொண்டவர்களும், அந்தமார்க்கத்திற்குஉரியவர்களும், அந்ததிருவருள் குறிப்புக்கு எதிர்பார்த்துக்கொண்டிருக்க, ஒருவிதமான உபகாரமுமில்லாத இவர், நோவாமல் நோன்புநூர்த்தது, போலிடிரஸ்டிபட்டத்தைதரித்துக்கொண்டு சபையையும் சபையைச்சேர்ந்த நிலங்களையும் சுதந்தரமாகப்பாராட்டி வெற்றிக்கொடியைநாட்டிக்கொண்டு, மரபுக்குவிரோதமானகாரியங்களைச்செய்வது என்னே, அதைச்சேர்ந்த அபிமானிகள் இவர்செய்யுங்காரியங்களை யாரும் கவனிக்காமையினால் கள்ளவேடத்தைதரித்துக் கொண்டாட்டம்போட ஆரம்பித்தார்- ஆனால் இவருடையஉண்மைதான் என்னே, அந்த வள்ளலார்வாக்கில் அவநம்பிக்கைவந்தபடியால் அதைமறைத்து அந்தவாக்கில் சத்தியநம்பிக்கையுடையவர்போல் வெளியாருக்கு நடித்துக்காட்டி, சமரசசுத்தசன்மார்க்க சத்தியஞானசபையை ஆலயமாக்கி, அதற்குள் விக்கிரகத்தைவைத்து, இவருடைய விளம்பரத்தில் குறிப்பிட்டதுபோல் பளிங்குதிரையில் ஸ்வர்ன்னவில்வமாலையைச்சாத்தி சிதம்பரத்தின் தீட்ஷதர்களைப்போல சுதந்தரமாகநின்று, தானும் தன்பின்வரும் குடும்பத்தாரும் அதனால் ஜீவனஞ்செய்துக்கொண்டுவரும்பொருட்டு, சபைக்கு கட்டளைகளை வைக்க அவரவர்களைத் தூண்டுவதும், ரொக்கங்களையும் பூமிகளையும் எழுதிவாங்கி அந்தகட்டளைகள் தன்

முன்னிலையிலும் தன்பின்வருபவர்களுடைய முன்னிலையிலு மந டந்துவரும்பொருட்டு, ரிஜிஸ்டாசெய்துக்கொள்ளுகிறதும், சா ஸ்விதமான ஸ்தாவரஜங்கமஸ்திதி சம்பாதிக்கவும் பிராமணர் களுக்கு அக்கிராரம் உண்டாக்குவதற்கு ஆராதிக்கும் சிவா சாரியர்களுக்கும் சாதக உபசாதக ஆசாரியர்களும் பரிசாரக ர் உபசாரகர் முதலிய கைங்கரியபரர்களும், வசிப்பதற்கு உ றைவிடம், உபசீவனமுதலியவை சம்பாதிக்க இவர்விளம்பரத் தில் பிரசித்தஞ்செய்திருப்பது, சபையை ஆலயமாக்கி ஜீவ னஞ்செய்யும்பொருட்டேயாம்- இப்படிப்பட்ட கள்ளயெண்ண த்தைபற்றியே, சாலையைசேர்ந்த நிலங்களின் மத்தியில் சுமார் 6, 7- காணிவரையில், பட்டாவில்சேராமல் சாலைதோன்றியகா லம்வரையில் சாலைஅநுபவத்திலிருந்ததை இராஜாங்கத்தார்ச ர்வேசெய்யுங்காலத்தில் கண்டுபிடித்தார்கள் இவர் உண்மை யான நம்பிக்கையுடையவராகவிருந்தால், சபைக்கும்சாலைக்கும் மததியிலிருந்த நிலங்களை, பொதுநன்மைக்கு சேர்ப்பதை விட்டு தன்மருமகன்பேரில்கள்ளத்தனமாகபட்டாசெய்துக்கொ ண்டு அந்தநிலங்களில் குளம்வெட்டி கோவில்கட்டி லிங்கஸ் தாபனைசெய்ய ஊருராகப்போய் பாழடைந்திருக்கும் கோவி ல்களின் லிங்கத்தைபிடுங்கச்சொல்லுகிறார்.

இதன்றி உலகத்தில் அனேகபொது சத்திரங்களுக்கும் போஷணைநிமித்தியம், எழுதிவைத்திருந்த நிலங்களையும் ரொ க்கங்களையும் பாதுகாப்பதற்கு காரியஸ்த்தர்களாக இருந்தவ ர்கள், தன்குடும்பத்திலிருக்கின்றவர்களுடையபெயரை, சாமி பெயராக அந்தசொத்துகளின்பேரில் பூட்டிவைத்திருந்து, மெல்லமெல்ல தங்கள் சுதந்தரத்தை பாராட்டிக்கொண்டுவந் து, சத்திரமுதலானதும் விர்ப்பனைசெய்து வாயில்போட்டுக் கொண்டார்கள், அப்படிக்கிருக்க, வள்ளலாரால் சமரசசுத் தசன்மார்க்க சத்தியஞானசபையென்றுவழங்க, இருக்கரத் தால் எழுதிக்கொடுத்திருக்க, இவர் மேற்படி இடங்களைமா

ஙியஞ்செய்யப்புகுந்து, ஞானனந்தவல்லி ஆனந்தநடராஜர்வீ
ற்றிருக்கும் சபையென்று, தன்குமாரன்பெயரை நாட்டிக்கொ
ண்டார், என்னகள்ளக்கருத்தைக்கொண்டோ தெரியவில்லை.

இதன்றி இரண்டொருவருஷத்திற்குமுன் சிலஅபிமானி
கள் சபைவிஷயமாய் இவரை கோர்ட்டில்வரவழைக்க சபை
நெடுங்காலமாகத்தன் அனுபவத்திலிருப்பதால், அனுபவத்தின்
லிமிடேஷன் தோஷம்வந்திருப்பதைபற்றி, இந்தவாதிகள்அ
தைவிஜாரிப்பதற்கு யாதொருசுதந்தரமில்லையென்று வாதாடி
னர், அப்போது இவருடையகள்ளக்கருத்து சபையைஅபக
ரித்துக்கொண்டு கூத்தாடலாமென்பதேயாம்.

இதன்றி சிலவருஷங்களுக்குமுன் சாலையைச்சேர்ந்த சி
லபொதுநிலங்களை, இவருக்கு உடந்தையாகவிருந்த வக்கீல்
வெங்கடேசர்ஐயருடைய சொந்தநிலங்களென்றும், அதுதனக்
குஅவரால்தானம் கொடுக்கப்பட்டதென்றும், கோர்ட்டில்சாதி
த்துஅசத்தியஞ்செய்தார்.

இதன்றி வள்ளலாருடைய விவகாரகாலத்தில் சேர்ந்தி
ருந்த காரியஸ்தர்கள் சுமார் 500 ரூபாவரையில் செலவுசெ
ய்து ஒருபெரியகுளம்வெட்ட ஆரம்பித்தார்கள், இதைவள்
ளலார் கேழ்விப்பட்டு, எள்ளுபோட்டால் எள்ளுகீழேவிழா
து, அப்படிப்பட்ட கும்பல்சேருவதற்கு ஒருகாலம்வரப்போ
கின்றது, குளம் அவிடம் இருக்கப்படாது வுடனேதூத்து
விடும்படி உத்திரவுசெய்தார்கள், அப்படியிருக்க இப்போ
து இவர் கள்ளதனமாக முன்னேகிணருவெட்டுவதாய் ஆர
ம்பித்து, அதை இப்போது சிவகங்கையென்று பெரியகுள
மாகச்செய்ய ஆரம்பித்தார்.

இதன்றி வள்ளலார்காலத்தில் மேற்படி சாலைநிலங்களை,
சில்காரியஸ்தர்கள் பயிரிடயெத்தனித்தார்கள், இந்தஇடம் அ

தற்காக ஆண்டவரால் நிர்ணயிக்கப் பட்டதல்லவென்று தடு த்துவிட்டார்கள், இப்போது இவர் போலிடிரஸ்டி அதிகா ரத்தின்பேரில், நிலங்களைபயிர்செய்ய வாரத்திற்குவிட ஆரம் பித்ததல்லாமல், சாலைக்கும் சபைக்கும் மத்தியில் தன்மருமு கன்பேரில் கள்ளதனமாக பட்டாசெய்துக்கொண்ட நிலத் தையும், வேலிஅடைத்து உழ ஆரம்பித்தார்.

இதன்றி இவர்சிலதருணங்களில் தனக்குவேண்டிய சில அங்கங்கஎல்லாம், கள்ளக்கருத்துடன் கடிதத்தில்எழுதிக் கொண்டு, அங்கங்கேபோய் தெரியாத பெண்பிள்ளைகளிடத் திலும் ஆண்பிள்ளைகளிடத்திலும் கையெழுத்துவாங்கி, ரிகா ர்டுசெய்துவைத்துக்கொள்ளுகிறார். அது என்னகள்ளக்கருத் தைக்கொண்டோ தெரியவில்லை.

நேயர்களே இதுவரையில் சொல்லிக்கொண்டுவந்த க தையினால் இவருடைய குருத்துரோகசிந்தனை ஒவ்வொன் றையும் உற்றுகவனியுங்கள். இவர் அந்தத்திருவருள் வாக்கி யத்தில் உண்மையானநம்பிக்கையுடையவர்போல், வள்ளலா ரை லட்சயமாகக்கொண்டாடி வருபவர்களிடத்தில், விசேஷ ம் வள்ளலாரைப்புகழ்ந்துபேசுவார். தன்னை லட்சியமாக க் கொண்டாடி வருபவர்களிடத்தில், வள்ளலாரை இகழ் ந்து தன்னைப்புகழ்ந்து காட்டுவார்- இராமலிங்கப்பிள்ளை அ னேகரைக்கெடுத்துவிட்டாரென்பார். சமயங்களையும் மதங்களை யும் பூர்வபட்சம் செய்து சொன்னவிவகாரங்களெல்லாம், வ ள்ளலார்சொன்ன விவகாரங்களல்லவென்பார். சிலவருஷத் திற்குமுன் இவர்வீட்டில் களவுபோனநிமித்தம் அனேகர்மு ன்னிலையில் வள்ளலாரை, துர்ப்பாஷையினால் இவர்இகழ்ந் து வார்த்தையாடினது அளவேயில்லை சிலரிடத்தில் வள்ள லாரைச்சூழ்ந்திருந்தவர்களெல்லாம் நிரட்சரக்குட்சிகள், யா ரும் ஒன்றுந்தெரிந்துக்கொள்ளவில்லை, தான்மாத்திரம்அட்சரகு

ட்சியாயிருந்தபடியால் அனேக இரகசியங்கள் தெரிந்துக்கொண்டதாயும், ஞானப்பால் உண்டதாயும் சொல்லுவார், இப்படி ஒருவரைவிட்டு ஒருவருக்கு அவரவர்கள் நிற்கும் நிலைக்குத் தக்கபடி வேடங்களைப்பூண்டு பேசுவார்- வள்ளலாரிடத்தில் இவர் எல்லாம் கேட்டுத்தெளிந்தவரென்றும், பிரதமசிஷரென்றும், ஞானப்பால் உண்டதுஉண்மையென்றும், இவருக் குத்தெரியாதது ஒன்றுமில்லையென்றும், தன்னைப்புகழ்ந்து காட்டி, தன்வேடத்திற்குத் தக்கபடி தாளம்போட, திருநெல்வேலி நாராயணஐயங்கார் என்கிற ஒருவரை, ஆளாக்கிவைத்துக்கொண்டு, வைணவத்தைவிட்டு,சைவசமயத்தில் நுழைக்கச்செய்து, கல்வியில்சிறிதும் பயிர்ச்சியில்லாமல், கும்பாபிஷேகவிதிகளைமாத்திரம், சிலதைகற்றறிந்த இவர், அவருக்குத் சாஸ்திரியென்றுபட்டப் பெயரையும்தரித்தார்- இப்பெயரை தரித்துக்கொண்ட இவர், வந்தபோது புலிபசுத்தோல்போர்த்ததுபோல் வேடந்தரித்திருந்து, பின்பு இவருடைய உண்மையான சொரூபத்தைக்காட்டத் தொடங்கினர், இவரைகுருக்கள் வசப்படுத்தியகாலமுதல், சாலையில் இவரால்கலகம் மேலுமேலும் பொங்கஆரம்பித்தது, சிவாநுபவச் செல்வரைப் போல் வள்ளலார் வாக்கியங்களுக்கெல்லாம் விபரீதமான அர்த்தங்களைச் செய்வதும், வாக்கியங்களை மாற்றவும் ஆரம்பித்தார், இந்தகுருக்கள்சொல்வதுபோலவே, இவருக்கும் ஆண்டவர் சொர்ப்பனத்தில்வந்து அனேககாட்சிகளைக் காட்டுவதாக, இவர்பாடும் கவிகளில் பூட்டுவார், அது உண்மையாகயிருந்தால் அப்படிப்பட்ட பரமாசாரியரைவிட்டு, திருவண்ணமலைக்குப்போய், எமனுக்குஇரையாக இருக்கும் அனாசாரியரைக்கொண்டு, மரபுக்கு விரோதமாக சந்நியாசவேடத்தைத் தரித்து கையில்விருதைப்பிடித்துக்கொண்டது என்னையோ, விருதைப்பிடித்த இவர்செத்தநாயைப்போல் இருப்பதைவிட்டு சேஷ்டைசெய்வது என்னை- இவர்இந்ததைபூசத்தில் சிலஅன்னியதேசத்தார்கள், வள்ளலாரிருந்த, திருச்சந்நி

தியைத் தரிசிக்கநின்றதருணத்தில், அவர்கள்மனம்நோகும்படி விளுசகாலே விபரீதபுத்திக்கினமாய், மேற்படி சந்நிதியை பூட்டிட்டு வநதுவிட்டாா வீடுவந்துசேருவதர்க்கு முன்னமே வழியில்தானே வெறிகொண்டு சிலஞள் மலஜலம் இன்னதென்றுதெரியாமல், உழன்றுகட்டி அடிக்கப்பட்டார். அத்தருணம் இந்தகுருக்களின் கள்ளவேடங்களெல்லாம் பயிரங்கப்படுத்திஞர். இவருக்கு ஆண்டவர் சொற்பனத்தில் தோன்றுவதாகஇருந்தால் வெறிபிடித்துஊருராகஅலேவதுஎன்னே?

இது வரையில் இதில்இந்தகுருக்கள் விஷயமாக சொல்லிவந்த ஒவ்வொன்றையும் உற்றுகவனியுங்கள், அந்தத்திருவாக்கில் இவருக்கு அவலம்வந்தபடியால், சபையை ஆலயமாக்கி, அதைச்சேர்ந்த நிலங்களையெல்லாம் தன்சுவாதீனஞ்செய்துக்கொண்டு தானும்தன்குடும்பத்தாரும் ஜீவனஞ்செய்யலாமென்பதே இவருடைய முக்கியக்கருத்து, அதற்குதக்கபடியே தன்னையாரும்கேழ்க்காதிருக்கவும் தனக்கு எல்லாசுதந்தரமும் இருப்பதுபோலவும் நடித்துக்காட்ட அதிகாரத்தைச்செலுத்தத்தக்க போலிடிரஸ்டிபட்டமும் கட்டிக்கொண்டார், இவருக்குபட்டம்கொடுத்த ஜமீன்தாருடைய முன்ஞேர்களெல்லாம், வள்ளலார் விவகாரபரியந்தம், தருமச்சாலையில் அன்னதானஞ்செய்தது அளவேயில்லை, அப்படிப்பட்ட புண்ணிய கைங்கரியங்களெல்லாம் மரந்து இவர்மயக்கத்தில் விழுந்து தர்மகர்த்தத்துவம் இன்னவிதமாக தமக்குவந்ததென்று யோசிக்காமலே இவருடையவார்த்தையைக்கேட்டு போலிடிரஸ்டிவேடத்தைமுடிசூட்டி இவர்இஷ்டப்படி கூத்தாடவிட்டார், அந்த ஜமீன்தாரரும் சமரசசுத்தசன்மார்க்க மரபுஇன்னதென்று, வள்ளலார் பாசுரங்களாலும், விவகாரங்களாலும், சொல்லியிருப்பதை தெரிந்துக்கொண்டவரல்ல.

இந்தஜமீன்தார்பேரில் பட்டாயிருந்ததைப்பற்றியே சாலைச

மைமுதலானவிடங்களுக்கு மத்தியிலிருந்த நல்லநிலங்களையெல்லாம் தன்மருமகன்பேரில் பட்டாசெய்துக்கொண்டு அங்கங்கே வேலிகளையடைத்து அந்தநிலத்தில் தனஇஷ்டப்படி செய்ய இடங்கொடுத்தது.

நேயர்களே சமரசசுத்த சன்மார்க்கத்தை விளக்கிகாட்டவந்த திருவருட்பிரகாசவள்ளலார், தாம்திருக்காப்பிட்டுக்கொள்ளும்வரையில், தம்மைச்சூழ்ந்திருந்தவர்கள், ஒவ்வொருவரும்,சமரசசுத்தசன்மார்க்கச்சாதனம் இன்னதென்றுதெரிந்து நடக்கும்பொருட்டு, அவர்கள் சொன்னவிவகாரத்தைச் சுருக்கமாக, இதனடியில் வருமாறுகாண்க. சமரசசுத்தசன்மார்க்கம்யென்றதற்குப் பொருள்விளக்கிக்காட்டிருப்பதை இதில் முன்னமே குறித்திருக்கிறோம் இதுவரையில் கர்மசித்தருடையகாலம், அதனால் சமயங்களும் மதங்களும் பரவியிருந்தன, இப்போது வரப்போகிறது ஞானசித்தருடையகாலம், இனி ஜாதிசமயமுதலான ஆசாரங்களெல்லாம்போய் சமரசசுத்தசன்மார்க்கசத்திய ஞானசாரம்ஒன்றேவிளங்கும்,சமயமதங்களில் சொல்லுகிர கருத்தர்கள் மூர்த்திகள் ஈசுரன் பிரமம் சிவம் முதலியதததுவங்கள் காலப்பிரமாண பரியந்தம் இருப்பதேயொழிய அதற்குமேலிராது, சமயமதங்களில்சொல்லுகிற கர்த்தர்களுடைய சித்திகள் சர்வசித்திகளுடைய கடவுளின் சித்தியின்லேசங்கள், அந்தசர்வசிததியையுடைய கடவுளுக்கு ஒப்பாகார்கள்,கோடி கோடி பங்குதாழ்ந்ததரத்திலிருக்கிரார்கள்,இப்போதிருக்கும் வேதாகமபுராணங்களிலும் சமயமதங்களிலும் லட்சியம்வையாதீர்கள்? வைத்தால் சமரசசுத்த சன்மார்க்கத்தில் உஙகளுக்கு லட்சியம்வராது, வராவிட்டால் நீங்கள் அடையப்போகிறது ஒன்றுமில்லை, ஆதலால் அதுகளெல்லாம் பற்றறவிட்டு, சர்வசித்தியையுடைய கடவுள் ஒருவருண்டென்றும், அவர் ஒருவரேயென்றும், அவரை உண்மையன்பால் வழிபாடுசெய்யவேண்டும். அப்படிப்பட்ட சமரசசுத்த

சன்மார்க்கத்திற்குறிய கடவுளை வழிபாடுசெய்வதற்கு, சாதனம் இருவகை- பரவுபகாரம், சத்விசாரம், பரஉபகாரமென்பது தேகத்தாலும், வாக்காலும், திரவியததாலும் உபகாரஞ்செய்வது, சத்விசாரமென்பது நேரிட்டபட்டத்தில் ஆன்மநேயசம்மந்தமான தயாவிசாரத்தோடுயிருபபது, கடவுளதுபுகழைவிசாரித்தல், ஆன்மாவின்வல்லமையைவிசாரித்தல், தன்சிறுமையைகடவுளிடததில விண்ணப்பித்தல் இந்தமார்க்கததால் தான்சுத்ததிரேகம்பெறவேண்டும். ஜீவர்களெல்லாம் ஒருதன்மையாகிய இயற்கையுண்மை ஏகதேசமாய் ச சர்வசக்தியுடைய கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டபடியால், ஒருரிமையுள்ள சகோதரர்களென்றெண்ணி, அவாகள். பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை இவைகளால்- துக்கத்தைஅனுபவிக்க கண்டபோதாயினும், கேட்டபோதாயினும், இவ்வாறுஉண்டாகுமென்று அறிந்தபோதாயினும், உபகாரஞ்செய்வதே ஜீவகாருண்யம்; இபபடிப்பட்ட ஜீவகாருண்யம் விளங்கும்போது, அறிவும்அன்பும் உடனாகநின்றுவிளங்கும், அதனால் உபகாரசத்திவிளங்கும், உபகாரசத்தியால் எல்லாநன்மைகளுந்தோற்றும், ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் வரும்விளக்கமே கடவுள்விளக்கமென்றும், ஜீவகாருண்யத்தினால் வரும்இன்பமே கடவுள்இன்பமென்றும், சொன்னார்கள் ஜீவகாருண்யம் உண்டானால் அன்புண்டாகும், அன்புண்டானால் அருளுண்டாகும், அருளுண்டானால் சிவாநுபவம்உண்டாகும், ஜீவகாருண்யமென்கிற திறவுகோலைக் கொண்டு அன்பின்வழிசென்று, அருளென்றும்பூட்டைத்திறந்து, நமது தலைவர்வாசஞ்செய்யும்கோட்டையில் நுழையவேண்டும். மேலும் ஜீவகாருண்யத்தில் பரஜீவகாருண்யமென்றும். அப ரஜீவகாருண்யமென்றும் இருவகை, பசியையும், கொலையையும் தவிர்ப்பது பரஜீவகாருண்யமென்றும், மற்றது அபர ஜீவகாருண்யம், ஜீவர்களுக்கு பசிஅதிகரித்தகாலத்தில் ஜீவவறிவுவிளக்கமில்லாமல் மயங்குகின்றன, அவைமயங்கவே யறிவு

க்கரிவாகிய கடவுள்விளக்கம் மறைபடுகின்றது, அதுமறைய வே புருடதத்துவஞ் சோர்ந்துவிடுகின்றது, அதுசோரவே பிர கிருதிதத்துவமழுங்குகின்றது, அது மழுங்கவே குணங்களெ ல்லாம் பேதப்படுகின்றன, மனம்தடுமாறிச்சிதறுகின்றது, புத்திகெடுகின்றது, சித்தங்கலங்குகின்றது, அகங்காரமழிகின் றது, பிராணன்சுழல்கின்றது, பூதங்களெல்லாம் புழுங்குகி ன்றன, வாதபித்தசிலேட்டுமங்கள் நிலைமாறுகின்றன, கண்ப ஞ்சடைந்து குழிந்துபோகின்றது, காது கும்மெனறு செ விடுபடுகின்றது, நாவுலர்ந்து வறளுகின்றது, நாசி குழைந் து அழல்கின்றன, தோல்மெலிந்து ஸ்மரணை கெடுகின்றது கை கால் சோர்ந்து துவளுகின்றன, வாக்குத்தொனி மாறிக் குளறுகின்றது, பற்கள்தளறுகின்றன, மலஜலவழி வெதும்பு கின்றது, மேனிகருகுகின்றது, ரோமம் வெறிக்கின்றது, நரம்புகள் குழைந்து நைகின்றது, நாடிகள் கட்டுவிட்டு குழைகின்றன, எலும்புகள் கருகிப் பூட்டுகள்நெக்குவிடுகின்ற ன, இருதயம் வேகின்றது, மூளைசுருங்குகின்றது, சுக்கிலம் வெதும்பி வற்றுகின்றது, ஈரல் கரைகின்றது, இரத்தமுஞ்ஜ லமுஞ் சுவறுகின்றது, மாம்சங்குழைந்து தன் மைகெடுகின்றது, வயிறு பகீலென்றெறிகிறது, தாபசோபங்கள் மேன்மேலும் உண்டாகின்றன, உயிரி ழந்துவிடுவதற்கு மிகவும்சமீபித்த வடையாளங்களும் அனு பவங்களுந் தோன்றுகின்றன, இவ்வாறு ஜீவர்களுக்கெல்லா ம் பொதுவாகவே யிருக்கின்றன, இவ்வளவு அவஸ்தைக ளும் ஆகாரங்கிடைத்தபோது உண்டு பசிநீங்கநீங்குகின்றன. அப்போது தத்துவங்களெல்லாம் தழைத்துள்ளங்குளிர்ந்தறி வுவிளங்கி, அகத்தினுமுகத்திலுஞ் சீவகளையுங் கடவுள்களையுந் துளும்பி ஒப்பில்லாத திருப்தியின்பமுண்டாகின்றது, இப் படிப்பட்ட யின்பத்தை உண்டுபண்ணுகின்ற புண்ணியத்துக்கு எந்தபுண்ணியத்தை யிணையென்றுசொல்லலாம்- இந்தபுண்ணி யத்தைச் செய்கின்ற புண்ணியர்களை எந்ததெய்வத்துக்குச்சரி

யென்றுசொல்லலாம். எல்லாதெய்வங்களுக்கும் மேலாகியகடவுள்அம்ஸமென்றே சத்தியமாகவறியவேண்டும்.

இப்படிப்பட்ட கடவுள்அம்ஸத்தை யுண்டாக்கும் புண்ணியகைங்கரியத்தைச் செய்துக்காட்டும்பொருட்டே தருமச்சாலையொன்று கட்டி தாங்கள் திருக்காப்பிட்டுக் கொள்ளுகிறபரியந்தம் அதில் அன்னதானஞ்செய்தது அளவேஇல்லை, தாங்கள் திருக்காப்பிட்டுக் கொள்ளுந்தருணத்திலும் தருமச்சாலையை சும்மாபோடாதீர்கள் புகைந்துக்கொண்டே இருக்கவேண்டுமென்றார்கள்- என்றால் அன்னதானஞ் செய்துக்கொண்டிருங்களென்பதேயாம், இரண்டாவது சத்விசாரமென்பது- சாந்தமனத்தையும், உண்ணோக்கத்தையும் உடைய சாதுக்களுடன், அனடயின்ட விசாரஞ்செய்தல், அதுநேராதபட்சத்தில் ஆன்மநேயசம்மந்தமான தயாவிசாரத்தோடிருப்பது, கடவுள்புகழை விசாரித்தல் ஆன்மாவின்உண்மையைவிசாரித்தல், தன்சிறுமையைக் கடவுளிடத்தில் விண்ணப்பித்தல், விசாரமென்பது சரிகைமுதலான நான்கில் நாலாவதுஞாலத்தில், சரிகை, கிரிகை, யோகம், ஞானமென்கிற நான்குபடியில் மூன்றாவதுபடியாகிய ஞாலத்தில் யோகஞ்செய்கிறபடியாகும, விசாரஞ்செய்கிற உஷ்ணத்தால் ஜலத்திலிருக்கிற பாச்சியை நீக்குவதுபோல், ஆன்மாவை தெரியஒட்டாமல் மறைத்துக்கொண்டிருக்கும் பச்சத்திரையை நீக்கிக்கொள்ளலாம், அது நீங்கினஉடனே அதற்குமேலிருக்கும் மற்ற எட்டுத்திரையும் அதிகவிரைவில் நீங்கிப்போய்விடும், விசாரத்தைவிட ஆண்டவரை மனநெகிழ்ச்சியோடு தோத்திரஞ்செய்வதினாலும், சதா அவன்திருவடியை சிந்தித்துக்கொண்டிருப்பதினாலும், கோடிகோடிபங்கு அதிகமாக நல்லஉஷ்ணத்தை உண்டுபண்ணிக்கொள்ளலாமென்றார்கள்.

இதன்றி சன்மார்க்கத்திற்குறிய சாதனங்கள் இந்திரியஒழுக்கம்- கரணஒழுக்கம்- ஜீவஒழுக்கம்- ஆன்மஒழுக்கம், இ

ந்திரியஒழுக்கமாவது- கொடியவார்த்தை முதலியவை செவி புகாமல் நிற்றல் நாதமுதலிய தோத்திரங்களை உற்றுக்கேட்டல், மற்றவை கேளாதிருத்தல் அசுத்தங்களை தீண்டாதிருத்தல்- கொடூரமாகப் பாராதிருத்தல்- ருசியின்மீது விருப்பமில்லாதிருத்தல்- சுகந்தம் விரும்பாதிருத்தல்- இனியவார்த்தையாடுதல்- பொய்சொல்லாதிருத்தல்- ஜீவஇம்சை நேரிடுங்கால் எவ்வித தந்திரத்திலாவது தடைசெய்தல். பெரியவாளிடத்தில் செல்லுதல்- உயிர்க்கு உபகரிக்குநிமித்தம் சஞ்சரித்தல்- உயிர்க்குஉபகரிக்குநிமித்தம் கையால்உபகரித்தல்- மலஜலாதிகளை அளவுமீராமலும் கிரமம்குறையாமலும் அளவைப்போல் தந்திரஔஷதிகளாலும் ஆகாரத்தாலும் பவுதிக பக்குவத்தாலும் செய்வித்தல்-

## கரணஒழுக்கம்.

சிற்சபையின்கண் மனத்தைசெலுத்துவது தவிற மற்ற எந்தவகைஆபாசத்திலும் செலுத்தாமல் இழுத்து மேற்குறித்தவிடத்திலிருத்துவது- பிறர்க்குற்றம் விசாரியாதிருத்தல்- தன்னைமதியாதிருத்தல்-செயற்க்கை குணங்களாலுண்டாகிய கெடுதியை நீக்கி இயற்கைகுணமாகிய சத்துவமயமாக இருத்தல், தனது சத்துருக்களாகிய தத்துவங்களைக் கோபித்தல்- அக்கிரமம்- அதிக்கிரமபுணர்ச்சி செய்யாதிருத்தல்.

## ஜீவஒழுக்கம்.

எல்லாமனிதர்களிடத்தும் ஜாதிசமயம்- மதம்- ஆசிரமம்- கோத்திரம்- சூத்திரம்- குலாசாரம்- தேசமார்க்கம்- உயர்வு- தாழ்வுஆகிய பேதங்களற்று தானாகநிற்றல்.

## ஆன்மஒழுக்கம்.

எண்பத்துநான்குலக்ஷ பேதயோனியிடத்துள்ள ஆன்மாக்களிடத்தில் இரங்கி ஆன்மாவே சபையாகவும் அதிலுள்பதியாகி பூரணமாகநிற்றல். சுத்தசன்மார்க்கத்திற்குறிய சாதனங்கள் அந்த திருவருள்வாக்கிலிருந்து ததும்பி வழிந்திருக்கும் மந்திரங்கள் இன்னம் அனேகம் அவர்கள்சொன்னவிவகாரசுருக்கத்திலும் ஆறுவது திருமுறையிலும் பார்க்கலாம் இப்படிப்பட்ட சாதனத்தைச் செய்துக்கொண்டு அந்தத் திருவரவுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருப்பதைவிட்டு இவர் அந்தத் திருவருள்வாக்கிற்கு விரோதமாக ஞானசபையை தேவஸ்தானமாக்கி விக்கிரகங்களை வைத்துவிளையாட ஆரம்பித்தார்- ஆனல் அந்தசபையானது என்னத்திற்காக கட்டப்பட்டது; வள்ளலாருடைய ஆன்மப்பிரகாசமாகிய ஞானசபையில் எல்லாம் வல்லசித்தன்வந்து அமர்ந்து திருவிளையாடல்செய்யப்போகிறபடியால் தமது ஆன்மப்பிரகாசமாகிய ஞானசபையைப்போல் வெளிமுகமாகவிளக்கிக்காட்டி ஆண்டவர்வருகைக்கி நாம் என்னசெய்யப் போகிறோம் ஒருசிறியகுடிசையாவதுபோடுங்களென்று சொன்னார்கள் அங்கிருந்தபொருளாளிகள் விசேஷப்பொருள் செலவுசெய்து வள்ளலார் குறிப்பின்படி ஒரு அலங்காரமான கட்டடத்தைக்கட்டினார்கள் இந்தகட்டடத்தை வள்ளலார் கண்ணால்பார்த்ததேயில்லை. சுத்தசன்மார்க்க சாதனையுடையவர்களுக்கு முதல் ஆன்மஅனுபவம் அதை மறைத்திருப்பது அசுத்தமாயா திரைகள்எழு, இந்தத் திரைகளை விசாரமென்கிற உஷ்ணஞானத்தால் நீக்கிக்கொண்டு அறிவுருவாகிய ஆன்மாவைக்கண்டு அறிவுருவாகிய கடவுளை அடையவேண்டியதிருப்பதால் அந்தக்குறிப்பையுங் காட்டுநிமித்தம் சபையில் திரையைபோடச் சொன்னதேயல்லது எல்லாம் வல்லசித்தன்வந்து அதில்புகுந்துக்கொண்டு எல்லாஅற்புதசித்திகளும் நடத்தஅல்ல-

வள்ளலாருடைய விவகாரத்தில் ஞானசபையென்பது ஆன்மப்பிரகாசம் அந்தப் பிரகாசத்திற்குள்ளிருக்கும் பிரகாசந்தான் கடவுள். அந்த வுள்ளொளியின் அசைவு நடம் இதைதான் சிற்சபையென்றும் ஞானசபையென்றும் நடனமென்றும் சொல்லுகிறதென்றார்கள்.

அறிவாரரியும் வண்ணங்களெல்லாமாகி விளங்குகின்ற ஒப்பற்றகடவுள்தாமே காரியப்படாது, பக்குவபட்ட ஆன்மாக்களின் முன்னிலையில் காரியப்படவேண்டும் அற்புதசித்திகளெல்லாம் விளங்க யாமேஅமர்ந்து விளையாடுகின்றோம்- என்று அற்புதபத்திரிகையில் குறிப்பிட்டது வள்ளலாருடைய ஆன்மப்பிரகாசமாகிய ஞானசபையில்லது இந்த குருக்கள் ஞாலங்காட்டும் சபையிலல்ல, அப்படி ஆண்டவர் காரியப்படுமிடம் அருளுருவாதலால் அது எங்கும்உள்ளது எங்கும்உள்ளபொருள் இப்போது இந்தகுருக்கள் ஞாலங்காட்ட முன்னிலையாக வைத்துக்கொண்டிருக்கும் ஞானசபையில் புகுந்துகொன்டு எல்லாஅற்புதசித்திகளும் நடத்தவேண்டியதில்லை. வள்ளலாருடைய விவகாரகாலத்தில் அருட்கோலமாகவெளிப்படும் சுத்ததேகத்தை, ஊனக்கண்ணால்பார்க்கமுடியாது, ஞானக்கண்வேண்டும், அந்த அருளுருவானது ஆன்மாக்களின் பக்குவத்தக்கபடி, அங்கங்கே நின்று அநுக்கிரகஞ் செய்யும், இப்படி தான் தில்லைமூவாயிரமென்றது, 2999 பேர் பக்குவப்பட்ட ஆன்மாக்கள், அதில்சுத்ததேகம்பெற்ற கர்மசித்தர் ஒருவர், அந்த சிதம்பரம் எல்லையிலிருந்த 2999 பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கும் அங்கங்கிருந்து, அவரவர்கள் நிலைக்குத்தக்கபடி அநுக்கிரகஞ்செய்துக்கொண்டு அந்த கூட்டத்தைநடத்திக்கொண்டுவந்தார், இந்தகலியுகம் ஆரம்பத்தில் அந்தசித்தர் அந்தக்கூட்டத்தோடு மறைந்தார் அந்தசித்தருடைய வுருவுதான் இப்போது குருமுகூர்த்தமாக சிதம்பரசபையில் வைத்திருக்கிறதென்றும் இ

ப்போது சுத்தசன்மார்க்கத்தை விளக்கஞ்செய்ய வெளிப்படப்போகிறவர் ஞானசித்தரென்றுஞ்சொன்னார்கள்.

ஆனால் ஆண்டவர் வருங்காலத்தில் ஞானசபையானது தானே திறந்துக்கொள்ளும் என்றுசொன்னதுஎன்னை- நமது ஆன்மப்பிரகாசமாகிய ஞானசபையானது தானேதிறந்துக்கொள்ளுமென்றுசொன்னதுஉண்மையே.

ஆனால் அப்போது அந்த ஞானசபையானது அற்புதமான கட்டடமாகத் தோற்றுமென்று சொன்னதுஎன்னை- சுத்ததேகம் அருளுருவானதால் அந்ததேகம் அற்புதமானகட்டடமாகத்தோற்றுமென்பதுஉண்மையே.

ஆனால் அப்போது எல்லாஅற்புதசித்திகளும் நடக்குமென்பது என்னை- காரியப்படும் அந்த சுத்ததேகத்தால் எல்லாஅற்புதசித்திகளும் நடக்குமென்பது உண்மையே.

மேற்சொன்னபடி சுத்தசன்மார்க்கத்தின் மரபைவிளக்கிக்காட்டவந்த ஞானசபையேயல்லது எல்லாம் வல்லசித்தன் அதில்வந்துபுகுந்துக்கொண்டு அற்புதசித்திகள் நடத்தக்கட்டியசபையும்அல்ல, அல்லது இவர் தேவஸ்தானமாக்கி வயிர்பிழைக்கக் கட்டிவைத்த சபையும்அல்ல, சபையைத்திறந்த சிலகாரியஸ்தர்கள் இவரை சபைக்கு தீவாராதனைச்செய்யநேமித்தார்களேயல்லது- ஊறுகெட நூலையிடுஎன்று சொன்னபெரியோர்களுடைய வாக்கியத்தைப் பரிபாலனஞ்செய்ய நேமிக்கவில்லை இவருடைய மரணம் பிணி மூப்பு இந்த மூன்றுஅவஸ்தையும் தவிர்க்கும்படியான சற்குருவுகிடைத்தும் அந்தகுறிப்பின்படி இவர் நிற்கப்பயன்படவில்லை என்னசெய்யலாம் இவருடைய கர்மத்தின்வலிவேவலிவு.

வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொள்ளுந்தருணத்தில் இவடம் அனேகர் அனேகஆரவாரஞ்செய்வார்கள் சொன்

ஞல் கேள்ளர்கள்- இரண்டரைவருடமாக நான்சொல்லிக் கொண்டுவந்தேன் இதுவரையில் இருந்ததுபோ லிராதீர்க ள் இது கடசிவார்த்தை இதுமுதல் கொஞ்சதினம் சாலைக்கி ப்போகிறவரையில் ஜாக்கிருதையாக மேல்சொன்னபிரகா ரம் விசாரஞ்செய்துக்கொண்டிருங்கள் அவசியம் தயவுஇ ருக்கவேண்டியது அந்ததயவுக்கு உரிமைமுக்கியமாக இருக் கவேண்டும் இவ்வாறிருந்துக்கொண்டிருந்தால் ஆண்டவர்வ ந்தவுடனே எல்லாநன்மையு பெற்றுக்கொள்ளலாம்என்றுசொ ன்னவாக்கியத்தை உற்றுக்கவனியுங்கள் சிவாச்சாரியாரென் று போலிடிரஸ்டிபட்டத்தைப் பூண்டு அந்தசபைமுதலான இடங்களுக்குத் தானேசுதந்தரகர்த்தாவைப்போல் நினைத்து தான்தோனறித்தம்பிரானுய்த் திரியும் இந்தகுருக்கள் வயிரு வளர்ப்பதற்குப் பராக்குகாட்டவந்த மருள்வலையில் அ கப்பட்டு வீண்பொருள் செலவுசெய்து மயங்காதீர்கள் ஒ ருதீபத்துக்குமேல் ஒரு தீபமேற்றிஞல் சகிக்காமல் அப்ப டி வீண்செலவு செய்யும்காசிக்கு அமுதுவாங்கி கஞ்சிகாச் சி ஏழைகளுக்கு வார்த்தாலும் பெரும்பயனைத்தரும் என் றுசொன்னவள்ளலார் வாக்கியத்தில் கவனத்தைவைத்து சுத் தசன்மார்க்கத்திற்குறிய சாதனங்கள் இன்னதுஎன்று அறி ந்து அந்த சற்குருவாக்கியத்திற்கு மாறுபாடில்லாமல் நாம் நடப்போமேயாகில் வள்ளலார்சொன்னபடி எல்லாம் வல்ல சித்தன் திருக்கோலத்துடன் வெளிப்படும்போது நாம் பெ ரும்பயனை அடைவது சத்தியம். நாம் அந்ததிருவருள்வா க்கியத்திற்கு விரோதமாகநடப்போமேயாகில் நாம்செய்யுங்கா ரியங்களெல்லாம் ஆற்றில்கரைத்த புளிபோலாகும்.

நேயர்களே நமதுஆன்மநேய சகோதரர்களில் இந்தகு ருக்களும் ஒருவர்தான் ஆனுல் நமதுசற்குருவின் கொள் கைக்கு மாறுபட்டதினுல் அவரைஎதிரியாகவைத்து பேசநே ரிட்டது இதுவரையில் அவர் சம்பாரித்துக்கொண்ட பொ

ருள்போதும் இனியாவது வள்ளலார் சொன்னமரபுக்கு விரோதமானகாரியங்கள் அந்தவிடத்தில் செய்யாமல் செத்தநாய்களைப்போலிருங்களென்று வள்ளலார் சொன்னவாக்கியத்தை கவனித்துநடக்கும்படி இதைப்பார்த்த ஒவ்வொருவரும் அவருக்கு அறிவையுருத்துங்கள் கேளாமல் வள்ளலார் வாக்கில் அவலமேயென்று சொல்வாரேயானால் ஜமீன்தார் விஷயமாக வள்ளலார் இவருக்குச்சொன்னபடி இவருடைய இருப்பிடதிற்குப்போய்விடுவதேநலம் இல்லாவிட்டால் வள்ளலார் கொள்கைக்கு விரோதமானகாரியங்கள் செய்யும்போது அவமதிக்கப்படுவார் நாம் என்னசெய்யலாம்- விதியின்படி வந்ததை அனுபவிக்கவேண்டியதுதான்.

வள்ளலார் விவகாரகாலத்திலிருந்த சிலஅபிமானிகளும் இப்போது லட்சியம்வைத்துச்சேரும் சிலஅபிமானிகளும் இவர்ஞாலவலையில் அகப்பட்டு மயங்குகிறபடியால் அம்மயக்கங்களை நீக்கும்பொருட்டே இவர் விஜயஞு ஆனிமீ 22 தேதி எழுதி வெளிப்படுத்திய விளம்பரத்திற்கு இந்தமறுப்புஎழுதலானோம்- இப்போது இவருடைய திவ்வியசரித்திரங்களை இவ்வளவில்விட்டு இனி வெளிப்படப்போகிற வடலூர் சரித்திரத்தில் இன்னம் விரிவைப்பார்க்கலாம்.

ஜென்மங்கள் அளவில்லை- அந்தந்தஜென்மங்களிலும் அடைந்தமரணம்- பிணி மூப்பு அளவில்லை இப்போது பெறுதற்குறிய உயிர்பிறப்பாகிய மனிதநேகத்தைப் பெற்றோம் இந்தஜென்மத்திலாவது இந்தமூன்றுஅவஸ்த்தையும் ஒழித்துஎக்காலத்தும் அழிவில்லாத பேரினபலாபத்தைப் பெற்றுவாழலாம் இப்படிப்பட்ட பேரின்பலாபத்திற்காகவே- பெரியோர்களெல்லாம் அழுதார்கள் அனேகர்கள் உணவில்லாமல் உரக்கத்தைவிட்டு ஐம்பொறிகளையடக்கி ஊனில் புற்றெழுந்து பூமிகளிலும் மலைகளிலும் குகைகளிலும் அனே

ககாலங்களாகத் தவஞ்செய்துகொண்டிருக்கிறார்கள் நமக்கு ஒருதவமுமில்லாமல் இப்படிப்பட்ட லாபம்வந்துவாய்ப்பது நாம் முன்செய்த தவப்பயந்தான்.

வள்ளலாரால் எழுதிவெளியிட்ட பத்திரிகை ஒன்றை இதனடியிற்காண்க.

சுத்தசிவசன்மார்க்கம் ஒன்றே இனிஎல்லாஉலகத்தும் வழங்கும் இதற்கு எவ்விதப்பட்டதடைகளுமில்லை தடையற்ற பெருநெறிவழக்கம் இக்காலந்தொட்டு அளவிறந்த நெடுங் காலம்வரையில் வழங்கும் அதன்மேன்மேலும் வழங்கும் பலவகைப்பட்ட சமயபேதங்களும் சாத்திரபேதங்களும் ஜாதிபேதங்களும் ஆசாரபேதங்களும்போய் சுத்தசன்மார்க்கப் பெருநெறிஒழுக்கம்விளங்கும் அது கடவுள்சம்மதம் இது (20)வருஷத்திற்குமேல் இப்போது வருகிறநமதுகடவுள் இதற்குமுன் சமயசாத்திரபுராணங்களில் வந்ததாகசொல்லுகின்ற பலவகைப்பட்டஎற்பாட்டுகர்த்தர்கள் மூர்த்திகள் கடவுள் தேவர் அடியார் யோகி ஞானி முதலானவர்களில் ஒருவரல்லஇப்படிசொல்லப்பட்ட எல்லாமூர்த்திகளும் எல்லாத்தேவர்களும் எல்லா கடவுளரும் எல்லாதலைவர்களும் எல்லாயோகிகளும் எல்லா ஞானிகளும் தங்கள்தங்கள் அனுபவங்களைக்குறித்து எதிர்பார்க்கின்றபடி எழுந்தருளுகின்ற தனித்தலைமைப்பெரும்பதி இது உண்மைஆயின் அந்தப்பதியின் அருளை நான்பெறுவேன் பெறுகின்றேன் பெற்றேன் என்னைஅடுத்தவர்களும் பெறுதற்கு யாதொருதடையுமில்லை பெறுவீர்கள் பெறுகின்றீர்கள் பெற்றீர்கள் அஞ்சவேண்டாம்.

| | | |
|---|---|---|
| பிரஜோத்பத்திஹு சித்திரை ௴ (1) உ சித்திவிளாகம் | } | திருவருட்பிரகாசவள்ளலார்கையெழுத்து |

இதன்றி இந்தகலியுகம் 5000 க்கு மேல் சுத்தசன்மார்க்கம்விளங்குமென்றார்கள் நம்முடைய புராணங்களிலும் கலவோ பஞ்சசாஹஸ்திராணி ஜாயந்திரிவர்ணசங்கரஹா5000 க்குமேல் கலியுகம் சங்கரமென்று சொல்லப்பட்டிருக்கின்றது மற்றமதஸ்த்தர்களும் இந்தஉலகம் சீக்கிரம் அழிவுபடுமென்று அவர்களுடைய ஆப்தவாக்கியங்களில் சொல்லப்பட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள்- கலி 432000 வருஷமென்று சொல்லியிருக்க 5000 த்தில் எப்படி முடிவுபெறும் என்றால் கலியுகவருஷத்தைப்பற்றி சுவாமிகளின் திருவாக்கிலிருந்து வெளிப்பட்ட விவகாரத்தை இதனடியிற்காண்க.

முதல்யுகத்திற்குநாள் 8 இரண்டாவதுயுகத்திற்கு நாள் 6 மூன்றாவதுயுகத்திற்கு நாள் 4 நான்காவதுயுகத்திற்கு நாள் 2 நாளொன்றுக்கு நாழிகை 60 நாழிகைஒன்றுக்கு விநாடி 60 விநாடிஒன்றுக்கு நொடி 60 இந்த மூன்றையும் பெருக்கினால் நாளொன்றுக்கு 216000 நொடி இரண்டுநாளைக்கு 432000 நொடி இந்தநொடிகளை வருஷமென்று கலியுகத்தில் வழங்குகிறார்கள் இதுசித்தர்களுடைய பரிபாஷை- கலியுகத்திற்கு வருஷம் 5000 தான்- கலியுகத்துக்குக் குறித்தநாள் 2 ல். அதாவது 432000 நொடியில் கல்பஞ்செய்து தேகசித்தியைப்பெற்றுக்கொண்டு நம்முடையகண்ணுக்குத் தோற்றாமல் வேறுவடிவந்தோடிருக்கிறவன் கலியுகபுருஷன் அவனுக்கு வயது 5000 தான் அவனுடைய சங்கற்பவிகற்பங்களால் இந்தஉலகம்அசைவுபெற்று ஆடுகின்றது இப்படியே அந்தந்தயுகதர்மத்திற்கு தக்கபடியே ஒவ்வொரு வல்லபசித்தனும் ஆண்டவனுடைய நியதியின்படி அந்தந்த யுகதர்மத்திற் குறித்தநாளதுயில் திருவருளால் தேகசித்தியைப்பெற்றுக்கொண்டு யுகதர்மங்களை நடத்தவேண்டும் இந்தக்கலியுகத்தைநடத்துகிறவன் கர்மசித்தன்- இந்த 5000 க்குமேல் வெளிப்பட

ப் போகிறவன ஞானசித்தன் இந்தசுத்தசன்மார்க்கம் அனேக கல்பங்களுக்கு ஒருதரம்வருகிறது இந்த சுத்தசன்மார்க்க காலத்தில் சர்வஆன்மாக்களும் அநுகிரகம்பெருவார்கள் என்ருர்கள்.

நேயர்களே— ஒவ்வொரு யுகதர்மங்களை நடத்த திருவருள் வலத்தால் வெளிப்படும் வல்லபசித்தர்கள் அதற்குமுன் நடந்தேறிவரும் யுகதர்மங்களை மாற்றவேண்டுமானல் தெய்வ வல்லபம வெளிப்பட்டாலல்லது நடந்தேறிவரும் யுகதர்மங்கள்மாருது- பெரியோர்களுடைய வாக்கியஙகளும் அப்படியே சொல்லப்பட்டிருக்கின்றது.

"தோல்வியும் வெற்றியும் சொன்மதங்கட்கெல்லாம் காலபேதத்திஞலுண்டிருந்தபற- கருத்தன்செயல தென்றுந்தீபற—" என்றுசொன்னபடி காலபேதமும் கருத்தனசெயலுங் கூடினலல்லது இப்போதிருக்கும் சமயங்களும மதஙகளும்மாருது ஆதலால் கலியுகதர்மம்மாறி சமரசசுத்தசன்மார்க்கம் வெளிப்படும்போது இறந்தோர்முதலானவர்களை தெய்வவல்லபத்தால் எழுப்பிக்காட்டினலல்லது கலியுகதர்மம்மாருது ஆதலால்5000 க்குமேல் சமரசசுத்தசன்மார்ககத்தை விளக்கஞ்செய்ய திருவருள்வலத்தால் வெளிப்படும் ஞானசித்தன இறந்தோர் முதலானவர்களை எழுப்புவதுஉண்மை.

வள்ளலாரால் வெளிப்பட்டிருக்கும் பத்திரிகையையும் பாசுரங்களையும்இனடியிற்காண்க.

அன்புள்ள நீங்கள் சமரசவேதசன்மார்க்க சங்கத்தருமச்சாலைக்கு மிகவு முரிமையுடை யீர்களாயில் உங்களுக்கு உண்மையுடன் அறிவிப்பது நீங்களும் உங்களையடுத்தவர்களும் சிற்றம்பலத் தந்தையார் திருவருளால் சுகமாகவாழ்வீர்களாக.

கர்மகாலமுதலிய பேதங்களால் யார்க்காயினும் தேக ஆனிநேரிட்டால் தகனஞ்செய்யாமல் சமாதியில்வைக்கவே ண்டும் இறந்தவர்கள் திரும்பஎழுந்து நம்முடன் இருக்கப் பார்ப்போமென்கிற முழுநம்பிக்கையைக்கொண்டு எவ்வளவுந் துயரப்படாமலும் அழுகுரல்செய்யாமலும் சிற்றம்பலக்கடவு ள் சிந்தையுடனிருக்கவேண்டும் புருடனிறந்தால் மனைவிதா லிவாங்குதல்வேண்டாம் மனைவியிறந்தால் புருடன் வேருக ல்லியாணப் பிரயத்தினம் செய்யவேண்டாம் பிள்ளைகளிறந் தால் சஞ்சலிக்கவேண்டாம் கர்மகாரியங்கள் ஒன்றுஞ்செய் யவேண்டாம் தெரிவிக்கத்தக்கவர்களுக்குத் தெரிவித்து ஒரு தினத்தில் நேரிட்டவர்களுக்கு நேரிட்டமட்டில் அன்னவிர யஞ்செய்யவேண்டும் இவ்வாறு உண்மையாக நம்பிச் செய்புங் கள் செய்திருந்தால் சமரசவேதசன்மார்க்க சங்கமும் மே ற்படி தருமச்சாலையும் நிலைபெறவிளக்கஞ் செய்யும்பொருட் டாகவும் கருணைகூர்ந்து எனதுதந்தையாராகிய எல்லாம்வல் லதிருச்சிற்றம்பலக்கடவுள் பார்வதிபுர சமரசவேதசன்மார் க்க சங்கத்தருமசாலைக்கு எழுந்தருளி காட்சிகொடுக்குந்தரு ணம் மிகவும் அடுத்தசமீபமாகவிருக்கின்றது அந்தத்தருணத் தில் சாலைக்கு உரியவர்களாயிருந்து இறந்தவர்களையெல்லா ம் எழுப்பிக்கொடுத்தருளுவார் இது சத்தியம் சத்தியம் இ ந்தக்கடிதம் வெளிப்பட்டிருந்துக்கொள்ளாமுன் இறந்துதகன மானவர்களையும் எழுப்பியருளுவார் இதுவெளிப்பட்டிரிந்த பின் தகனஞ்செய்தல்கூடாது அதுசன்மார்க்க சங்கத்திற்கு தக்கதல்ல ஆகலில் மேற்கண்டபடி உண்மையானநம்பிக்கை யுடன்வாழ்வீர்களாக எனக்கு உலகு அறிவுதெறிந்ததொட்டு எனதுதந்தையார் திருவருளை நான் அடையும்வரையில் என் னுடன்பழகியும் என்னைநம்பியடுத்தும் என்னைக்கேழ்வியால் வி ரும்பியும் எனக்குரிமைப்பட்டும் இருந்து இறந்தவர்களையெ ல்லாம் எழுப்பிக்கொடுத்து சமரச சன்மார்க்கசங்கத்தை வி

ர்த்திசெய்விக்கத் திருவுளத்துக்கருதியபெருங்கருணை வள்ள ல் சாலைக்குரியவர்களாகி யிருந்தும் அவநம்பிக்கையுடனிரு க்கின்றவர்கள் விஷயத்திலும் இந்த உபகாரஞ்செய்தருளுவார் ஆனால் அவர்கள் சன்மார்க்க சங்கத்திற்குமாத்திரம அரு கராகார்கள்.

ஆகலில் நம்பிக்கையுடனிருங்கள் பெரிய களிபபை யடைவீர்கள் இதுசத்தியம்.

| | |
|---|---|
| பிரமோதூத-ஞு சித்திரை-மீ 18-உ | அருட்பிரகாசவள்ளலார் கையெழுத்து. |

அப்பன்வருதருண மிதேயையமிலைகண்டா யஞ்சாதேயஞ் சாதேயகிலமிசையுள்ளார்க், கெய்ப்பெறவேசத்தியமென்றுவா த்திடு நின்னுரைக்கோரெள்ளளவும்பழுதுவராதென் றிறைவ ராணை, இப்புவியோவானகமும்வானகத்தின்புறத்துமெவ்வுயிரு மெவ்வெவருமேத்தி மகிழ்ந்திடவே, செப்பமுறுதிருவருட்பே ரொளிவடிவாய்க்களித்தே செத்தாரையெழுப்புதல்நாந்திண்ண மூணர்மனனே

முயன்றுலகிற்பயனடையாமூடமதமனைத்தா
முடுகியழுந்திடவுமொருமோசமுமில்லாதே,
இயன்றவொருசன்மார்க்கமெங்குநிலைபெறவு
மெம்மிறைவனெழுந்தருளவிதுதருணங்கண்மா ர்,
துயின்றுணர்ந்தேயெழுந்தவர்போ விரந்தவர்களெல்லாம்
தோன்றவெழுகின்றதிது தொடங்கிநிகழ்ந்திடுநீர்,
பயின்றறியவிலாந்துவம்மின் படியாதபடிப்பைப்
படித்திடலா முணர்ந்திடலாம் பற்றிடலாஞ்சுகமே.

அஞ்சலைநீயொருசிறிதுமென்மகனே

## அருட்பெருஞ்சோதி.

யருட்பெருஞ்சோதியையளித்தனமுனக்கே
துஞ்சியமார்ந்தனையெழுப்புகநலமே
சூழ்ந்தசன்மார்க்கத்திற்செலுத்துகசுகமே
விஞ்சுறமெய்ப்பொருண்மேனிலைதனிலே
விஞ்சைகள்பலவுளவிளக்குகவென்றாய்
தஞ்சமென்றவர்க்கருள்சத்தியமுதலே
தனிநடராசவென்சற்குருமணியே.

பேருற்றவுலகிலுறுசமயமதநெறியெலாம்
பேய்பிடிப்புற்றபிச்சுப
பிள்ளைவிளையாட்டெனஉணர்ந்திடாதுயிர்கள்பல
பேதமுற்றங் குமிங் கும்
போருற்றிறந் துவீண்போயினாரின்னும்வீண்
போகாதபடிவிரைந்தே
புனிதமுறுசுத்தசன்மார்க்கநெறிகாட்டிமெய்ப்
பொருளினையுணர்த்தியெல்லாம்
ஏருற்றசுகநிலையடைந்திடப்புரிதிநீ
யென்பிள்ளையாதலாலே
யிவ்வேலைபுரிகவென்றிட்டனமனத்தில்வே
றெண்ணற்கவென்றகுருவே
நீருற்றவொள்ளியநெருப்பேநெருப்பினு
ணிறைந்திருளகற்றுமொளியே
நிர்க்குணானந்தபரநாதாந்தவரையோங்கு
நீதிநடராசபதியே.

நீடுலகிலுற்றவர்களென்குறைவுரைக்கின்ற
நின்வார்த்தையாவும்நமது
நீள்வார்த்தையாகுமிதுஉண்மைமகனேசற்றும்
நெஞ்சமஞ்சேலுனக்கே
யாடுறுமருட்பெருஞ்சோதியீந்தனமென்று

மழியாதநிலையினின்றே
யன்பிறலெங்கெங்குமெண்ணியபடிக்குநீ
யாடிவாழ்கென்றகுருவே
நாடுநடுநாட்டத்திலுற்றவனுபவஞான
நானிளங்காலையடைய
நல்கியபெருங்கருணையப்பனேயம்மையே
நண்பனேதுணைவனேயென்
னூடுபிரியாதுற்றவின்பனேயன்பனே
யொருவனேயருவனேயுள்
ளூறுமமுதாகியோராறின்முடிமீதிலே
யோங்குநடராசபதியே.

உள்ளுண்டஉண்மையெலாம்நானறிவேனென்னை
யுடையபெருந்தகையறிவாருலகிடத்தேமாயைக்,
கள்ளுண்டசிற்றினத்தார்யாதறிவாரெனது
கணவர்திருவரவிந்தக்காலையிலாங்கண்டாய்,
நள்ளுண்டமாளிகையைமங்கலங்கணிரம்ப
நன்குபுனைந்தலங்கரிப்பாய்நான்மொழிந்தமொழியைத்,
தள்ளுண்டிங்கையுறேல்நடத்திறைவரானை
சத்தியஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே.

## வெண்பா.

நானுரைக்கும்வார்த்தையெலாம் நாயகன்சொல்வார்த்தையன்றி
நானுரைக்கும்வார்த்தையன்று நாட்டீர்நா — னேனுரைப்பேன்
நானோரெனக்கெனவோர் ஞானவுணர்வேதுசிவம்
தானேடிநில்லாவழி.

போற்றியுரைக்கின்றேன் பொய்யென்றிகழாதீர்
நாற்றிசைக்கண்வாழு நமரங்காள் — ஆற்றலருள்

அப்பன்வருகின்றா னருள்விளையாட்டாடுதற்கென்
றிப்புவியிலித்தருணமிங்கு.

குறித்துரைக்கின்றேனிதனைக்கேண்மினிங்கேவம்மின்
கோணுமனக்குரங்காலேநாணுகின்றவுலகீர்,
வெறித்தவும்மாலொருபயனும்வேண்டுகிலேனெனது
மெய்யுரையைப்பொய்யுரையாய்வேறுநினையாதீர்,
பொறித்தமதஞ்சமயமெலாம்பொய்பொய்யேயவற்றில்
புகுதாதீர்சிவமொன்றேபொருளெனக்கண்டறிமின்,
செறித்திடுசிற்சபைநடத்தைத்தெரிந்துதுதித்திடுமின்
சித்தியெலாமித்தினமேசத்தியஞ்சேர்ந்திடுமே.

நீர்பிறரோயானுமக்குநேயவுறவலனோ
நெடுமொழியேயுரைப்பனன்றிக்கொடுமொழிசொல்வேனோ,
சார்புறவேயருளமுதந்தந்தெனைமேலேற்றித்
தனித்தபெருஞ்சுகமளித்ததனித்தபெரும்பதிதான்,
சீர்பெறவேதிருப்பொதுவிற்றிருமேனிதரித்துச்
சித்தாடல்புரிகின்றதிருநாள்களடுத்த,
ஓர்புறவேயிதுநல்லதருணமிங்கேவம்மி
னுலகியலீருண்ணியவாறுற்றிடுவீர்விரைந்தே.

சத்தியவான்வார்த்தையிதுதானுரைத்தேன்கண்டாய்
சந்தேகமிலையிதனிற்சந்தோடமுறுவாய்,
இத்தினமேயருட்சோதியெய்துகின்றதினமா
மினிவருமத்தினங்களெலாமின்பமுறுதினங்கள்,
சுத்தசிவசன்மார்க்கந்துலங்குமெலாவுலகுந்
தூய்மையுறும்நீயுரைத்தசொல்லனைத்தும்பலிக்கும்,
செத்தவர்களெழுந்துலகிற்றிரிந்துமகிழ்ந்திருப்பார்
திருவருட்செங்கோலென்றுஞ்செல்லுகின்றதாமே.

களிப்பொடுமகனேயருளொளித்திருவைக்

கடிகையோரிரண்டரையதனி
    லொளிப்பிலாதுலகமுழுவதுமறிய
வுனக்குநன்மணம்புரிவிப்பா
    மளிப்புறுமகிழ்வால்மங்கலக்கோல
மணிபெறப்புனைகநீவிரைந்தே
    வெளிப்படவுரைத்தமென்றனர்மன்றில்
விளங்குமெய்ப்பொருளிறையவரே.

    என்சாமியெனதுதுரையென்னுயிர்நாயகமே
யின்றுவந்துநானிருக்குமிடத்திலமர்கின்றார்
    பின்சாருமிரண்டரைநாழிகைக்குள்ளேயெனது
பேருடம்பிற்கலந்துளத்தேபிரியாமலிருப்பார்
    தன்சாதிபுடைப்பெரியதவத்தாலேநான்றன்
சாற்றுகின்றேனறிந்ததிதுசத்தியஞ்சத்தியமே
    மின்சாருமிடைமடவாயென்மொழிநின்றனக்கே
வெளியாகுமிரண்டரைநாழிகைகடந்தபோதே.

இப்படிப்பட்ட பாசுரங்கள் இன்னம் அனேகம் வள்ளலார் திருவாக்கிலிருந்து வழிந்திருப்பதை ஆறாவது திருமுறையில்பார்க்கலாம்.

மேற்சொன்னபாசுரங்களில் 2½ கடிகையென்பது 25 வருஷம் இந்த 25 வருஷம் வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொண்ட ஸ்ரீமுகவருஷமுதல்- இன்றுவந்து நானிருக்குமிடத்திலமர்கின்றார் என்றது ஸ்ரீமுகவருஷம் தைமாதம் 19 தேதி சுக்கிரவாரம்- திருக்காப்பிட்டுக்கொண்டதினம் பின்சாரு மிரண்டரைநாழிகைக்குள்ளே யெனதுபேருடம்பிற் கலந்துளத்தே பிரியாமலிருப்பார் என்றது- இப்போதிருக்கும் மங்கலக்கோலந்தான்- மின்சாருமிடைமடவாயென் மொழிநின்றனக்கே வெளியாகு மிரண்டரைநாழிகை கடந்தபோதே என்றது ஸ்ரீமு

கவருஷமுதல் 25 க்குமேல் இப்போது வள்ளலார் திருக்கா ப்பிட்டுக்கொண்டு 22- வருஷமாகின்றது இன்னம் அந்தத் திருவருள் சித்தத்திருக்கோலத்துடன் வெளிப்பட 3 வருஷ மிருக்கின்றது கலியுகமும் 4997- ஆய்விட்டது 5,000க்கு இ ன்னம் 3- வருஷமிருக்கின்றது ஆதலால் நேயர்களே ஈரே ழுபதினன்கு உலகங்களிலுள்ள யாவரும் அதிசயிக்கும்படி எல்லாம்வல்லசித்தன் திருக்கோலங்கொண்டு அருளர சாட்சி செய்யுநிமித்தம் வெளிப்பட எழுந்தருளுந்தருணம் சமீபித்தி ருக்கின்றது ஒளியினுல் இருள்நீங்குவதுபோல் புண்ணியதே கம் வெளிப்படும்போது பாவதேகங்கள் நசித்துப்போகும் அப்படிப்பட்ட உற்பாதமரணங்களுக்கு நாம் ஆளாகாமல் பா வத்திற்கு முதன்மையாக இருக்கும் கொலைபுலையாதிகளை ப ற்றறவிட்டு சைவம் வைணவம் சமணம் பவுத்தம் முதலாகப் பலபெயர்கொண்டு பலபடவிரிந்த அளவிரந்த சமயங்களும் அச்சமயங்களிற் குறித்தசாதனங்களும் தெய்வங்களும் கதிக ளும் தத்துவசித்தி விகற்பபேதங்களென்றும் அவ்வவச்சமயங் களிற் பலபடவிரிந்த வேதங்கள் ஆகமங்கள் சாஸ்திரங்கள் புராணங்கள் முதலியகலைகளெல்லாம் தத்துவசித்தி கற்பனை க்கலைகளென்றும் வேதாந்தசித்தாந்த முதலாகப்பலபெயர்கொ ண்டு பலபடவிரிந்தமதங்களும் மார்க்கங்களும் சுத்தசன்மார் க்கானுபவ லேசசித்தி பேதங்களென்றும் வள்ளலாரால் வி வகரித்திருக்கிறபடி அதுகளையும் பற்றறவிட்டு அந்தத்திருவ ருள்வாக்கில் உண்மைநம்பிக்கையைவைத்து எல்லாச்சமயங் களுக்கும் எல்லாமதங்களுக்கும் எல்லாமார்க்கங்களுக்கும் உண் மைப்பொதுநெறியாகிவிளங்கும் சமரசசுத்தசன்மார்க்கத்தைப்பி டித்து இயற்கையிற்றனே விளங்குகின்றவராய் உள்ளவரென்று ம் இயற்கையிற்றனே உள்ளவராய் விளங்குகின்றவரென்றும்இ ரண்டுபடாத பூரண இன்பமானவரென்றும் எல்லா அண்டங்களை

யும் எல்லா உலகங்களையும் எல்லாப்பதங்களையும் எல்லாசத்திகளையும் எல்லாச்சத்தர்களையும் எல்லாத்தத்துவங்களையும் எல்லாத்தத்துவிகளையும் எல்லாவுயிர்களையும் எல்லாச்செயல்களையும் எல்லாஇச்சைகளையும் எல்லாஞானங்களையும் எல்லாப்பயன்களையும் எல்லாவனுபவங்களையும் மற்ற எல்லாவற்றையும் தமதுதிருவருட்சத்தியால் தோற்றுவித்தல் வாழ்வித்தல் குற்றம்நீக்குவித்தல் பக்குவம்வருவித்தல் விளக்கஞ்செய்வித்தல் என்றும்ஐந்தொழில்களாதியாய் பெருங்கருணைத்தொழில்களை இயற்றுவிக்கின்றவரென்றும் எல்லாமானவரென்றும் ஒன்றுமல்லாதவரென்றும் சர்வகாருண்யரென்றும் சர்வவல்லவரென்றும் எல்லாம் உடையராய்த் தமக்கு ஒருவாற்றானும் ஒப்புயர்வில்லாத் தனிப்பெருந் தலைமை அருட்பெருஞ்சோதிய ரென்றும் சத்தியஅறிவால் அறியப்படுகின்ற உண்மைக்கடவுள் ஒருவரே அகம்புற முதலிய எவ்விடத்தும் நீக்கமின்றி நிறைந்த சுத்தமெய்யறிவென்னும் பூரணப்பொதுவெளியில், அறிவாரறியும் வண்ணங்களெல்லா மாகிவிளங்குகின்ற ஒருவரேயாகிய கடவுளைநாம் சிந்தித்து பொதுப்பட நல்லறிவு- உயிரிரக்கம் பொது நோக்கம் திரிகரண அடக்கமுதலிய நற்குணங்களொழுக்கங்களில் ஒழுகப்பெற்று இறந்தவர்களை சமாதிசெய்து,

" பரனளிக்குந் தகமிது சுடுவதபராதமெனப்பகர்கின்றேனீர் சிரனெரிக்கச் சுடுகின்றீர் செத்தவர்கள்பற்பலருஞ் சித்தசாமி உரனளிக்க வெழுகின்ற திருநாள்வந்தடுத்தனவீ துணர்ந்து நல்லோர்- வரனளிக்கப்புதைத்த நிலைகாணீரோ கண்கெட்ட மாட்டினீரே "

எல்லாம் வல்லசித்தன் வெளிப்படும் மங்கலதிருக்கோலத்தைக் கண்காட்சியாக உடல்குழைய உள்ளங்குளிர ஆனந்தக்கண்ணீர்கொண்டு பரவசத்துடன் தரிசிக்கப்பெறும் பெ

ரும் புண்ணியமுடையவர்களா யெதிர்படவாய்க்கப்பெறவும் நீ ன்றிருமேயானால் நாம் எல்லவரும் சுத்தசன்மார்க்கத்திற்கு உரிமையுடையவர்களாகி இறந்தவர் உயிர்பெற்றெழுதல் மூப்பினர் இளமையடைப்பெற்று நிற்றல் முதலியபலவகை அற்புதங்களைக்கண்டு களிப்படைவதோடு அறிந்தறியாத அற்புத அறிவுகளையும் செய்தறியாத அற்புதச்செயல்களையும் அனுபவித்தறியாத அற்புத அநுபவங்களையும் வெளிப்படாரிசிக்கும அதே கணத்திலுள்ளே பெற்றுப் பெருங்களிப்புடன் எக்காலத்தும் எவ்விதத்தும தடைபடாத சத்தியசுக பூரணப்பெருவாழ்வு என்னும் பேரின்பசித்திப் பெருவாழ்வில் வாழப்பெறுவோம் இதுசத்தியம்- இதுசத்தியம்- இதுசத்தியம்.

இங்ஙனம் நமது திருவருட்பிரகாச வள்ளலாரால் விரித்து விவகரிக்கப்பட்ட மலையிலக்கான பொய்யாப் பெருமொழிகளின் கருணைரசத்தின் வெள்ளப்பெருக்கத்தில் ததும்பிவழிந்த மந்திரத்திருவருண் மெய்ம் மொழிகளின் சருக்கம்.

வடலூர் பார்வதிபுரம் சத்திய தருமச்சாலை.

மன்மத-௵ தை-௴ 17-உ.